# அருள்

றைவன் தொண்டருள் ஒடுக்கம்!

2/72

Acc.No. 33767



பகவான்

ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்ஸர்





தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 6 ] விரோதிகிருது மாசி (13-2-72) [ கருணை 5

## பரமஹம்ஸரின் ஜயந்தி

இந்த மாசி மாதம் 4'ம் தேதி (16-2-72) புதன் கிழமையன்று, பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் ஜயந்தி வருகிறது.

ஞான முதிர்ச்சியிலும் அநுபூதி நிலையிலும், வசிஷ்டர் வாமதேவர் போன்ற வேதகாலத்து ரிஷிகளோடு ஒப்பிடத்தக்க வ்ர் பகவான் பரமஹம்ஸர். அவருடைய உபதேச மொழிகள் உபநிஷத்துக்களுக்கு நிகரானவை.

அந்த உபதேச மொழிகளை நம் " அருள் " பத்திரிகையில் நெடுங்காலமாகத் தொடர்ந்து வெளியிட்டுவருவது நேயர்களுக்குத் தெரியும். இம்மாத இதழில், அவருடைய ஜயந்தி விழாவை முன்னிட்டு, பகவானைப் பற்றிய சிலகட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன.

பகவானுடைய வாழ்க்கையும் உபதேசங்களும் உலகனைத்துக்குமே வழிகாட்டிகளாக விளங்கக் கூடியவை. அவற்றால் பயன் பெறும் பாக்கியத்தை, இறைவன் நமக்கு அருள்வானாக!

—ஆசிரியர்.



| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ 100 | 50 காசு |

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி: நிர்வாகி, " அருள், "
4, தணிகாசலம் செட்டி தெரு, தியாகராய நகர் சென்னை-17

உ

# ஸ்ரீ வல்லபை கணேசர் பிரசாதமாலை.

## வடலூர் ஸ்ரீ இராமலிங்க வள்ளலார்

திருநெடு மாலன் றுலிடை நினது
சேவடித் துணைமலர்த் துகளான்
பெருநெடு மேனி தளிர்படப் பாம்பின்
பேருரு வகன்றமை மறவேன்
கருநெடுங் கடலைக் கடற்றுநற் றுணையே
கண்கண் மூன் றுடையசெங் கரும்பே
வருநெடு மருப்பொன் றிலகுவா ரணமே
வல்லபைக் கணேசமா மணியே. (1)

விண்ணவர் புகழு மெய்கண்ட நாதன்
வித்தகக் கபிலனு தியர்க்கே
கண்ணருள் செயுநின் பெருமையை யடியேன்
கனவிலு நனவிலு மறவேன்
தண்ணருட் கடலே யருட்சிவ போக
சாரமே சராசர நிறைவே
வண்ணமா மேனிப் பரசிவக் களிறே
வல்லபைக் கணேசமா மணியே. (2)

நாரையூர் நம்பி யமுதுகொண் டுட்ட
நற்றிரு வாய்மலர்ந் தருளிச்
சீரைமே வுறச்செய் தளித்திடு நினது
திருவரு ளுடொறு மறவேன்
தேரையூர் வாழ்வுந் திரமல வெனுநற்
றிடமெனக் கருளிய வாழ்வே
வாரையூர் முலையாண் மங்கைநா யகியெம்
வல்லபைக் கணேசமா மணியே. (3)

கும்பமா முனியின் கரகநீர் கவிழ்த்துக்
குளிர்மலர் நந்தனங் காத்துச்
செம்பொனுட் டிறைவற் கருளிய நினது
திருவருட் பெருமையை மறவேன்
நம்பனுர்க் கினிய வருண்மகப் பேறே
நற்குணத் தோர்பெரு வாழ்வே
வம்பரு மலர்த்தார் மழைமுகிற் கூந்தல்
வல்லபைக் கணேசமா மணியே. (4)

அயன்றவத் தீன்ற சித்திபுத் திகளா
மம்மைய ரிருவரை மணந்தே
இயன்றவண் டங்கள் வாழ்வுறச் செயுநின்
னெழின்மணக் கோலத்தை மறவேன்
பயன்றருங் கருணைக் கற்பகத் தருவே
பரசிவத் தெழுபரம் பரமே
வயன்றரு நிமல நித்தியப் பொருளே
வல்லபைக் கணேசமா மணியே. (5)

முன்னருந் தவத்தோன் முற்கலன் முதலா
முனிவர்க ளினிதுவீ டடைய
இன்னருள் புரியு நின்னருட் பெருமை
யிரவினும் பகலினு மறவேன்
என்னரும் பொருளே யென்னுயிர்க் குயிரே
யென்னர சேயென துறவே
மன்னரு நெறியின் மன்னிய வறிவே
வல்லபைக் கணேசமா மணியே. (6)

துதிபெருங் காசி நகரிடத் தனந்தந்
தூயநல் லுருவுகொண் டாங்கண்
விதிபெரு மனைக டொறும்விருந் தினனய்
மேவிய கருணையை மறவேன்
நதிபெருஞ் சடிலப் பவளநற் குன்றே
நான்மறை நாடரு நலமே
மதிபெறு முளத்திற் பதிபெருஞ் சிவமே
வல்லபைக் கணேசமா மணியே. (7)



# மகேந்திரநாத் குப்தர்

**ஸ்ரீ பிரம்மசாரி தயாள்**

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பார்ப்பதற்காக மகேந்திரநாத் குப்தர் என்பவர் சென்றிருந்தார். அப்போது பரமஹம்ச தேவர் பக்தர்களுடன் ஆன்மீக விஷயங்களைக் குறித்துப் பேசிக் கொண்டிருந்தார். மகேந்திரநாதர் அப்போதுதான் பரமஹம்சரை முதல் முறையாகப் பார்த்தார். தாம் கேள்வியுற்ற மகானை அந்தக் கோலத்தில் பார்த்த மகேந்திரநாதருக்கு, சுகதேவரே அமர்ந்து ஞானேபதேசம் செய்வது போலத் தோன்றியது.

கங்கைக் கரையும் தட்சிணேசுவர ஆலயமும் பரமஹம்சரின் பவித்திரமான சான்னியத்தியமும் மகேந்திரரின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன.

அங்கிருந்த ஒருவரிடம் அவர் நெருங்கி, பரமஹம்சரைப் பற்றி விசாரிக்கலானார்.

"ஸ்ரீராமகிருஷ்ணர் பெரிய கல்விமானா? நூலறிவு நிரம்பப் பெற்றவரா?"

"அவர் எந்தப் புத்தகத்தையும் படித்தவரல்லர். ஆனால், புத்தகங்கள் யாவும் அவரது திருநாவிலே நடமாடுகின்றன"

புத்தகங்களை விழுந்து விழுந்து படித்து, அதனால் பெற்ற அறிவினால் புகழ் பெற்றவர்களை மகேந்திரர் கண்டதுண்டு. பரமஹம்சர் நூலறிவற்றவர் என்பதைக் கேட்க அவருக்குப் பெரும்வியப்பு உண்டாயிற்று.

பிற்காலத்தில் இவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரின் குறிப்பிடத் தக்க இல்லற அடியார்களில் ஒருவரானார். அவர் பரமஹம்சரைக் காணச் செல்லும்போதெல்லாம், பக்தர்களிடம் பேசும்போது ஸ்ரீராமகிருஷ்ணர் என்ன என்ன சொன்னாரோ அதையெல்லாம் குறித்து வைத்தார். அதை அவர் 'ம' என்ற புனைப் பெயரில் ஐந்து தொகுதிகளாகப் பிற்காலத்தில் வெளியிட்டார்.

அந்நூல்தான் பரமஹம்சரின் உபதேசங்கள் உலகிற்குப் பரவக் காரணமாயிற்று. இன்று பல மொழிகளில் அந்நூல் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது.

இவர் ஒரு உயர்நிலைப்பள்ளியின் தலைமை ஆசிரியராக இருந்தார். இவரது மாணுக்கர்களில் ஒருவர் சாரதா பிரசன்ன என்பவர், ஸ்ரீராமகிருஷ்ணரின் துறவுச் சீடராகி, சுவாமி திரிகுணதீதானந்தர் என்று பெயர் பெற்ருர்.

மகேந்திரர் எப்போதாவது பரமஹம்சரைக் காணச் செல்வார். அதை அவர் குறித்து வைத்தது என்று கிடைத்திருப்பதே ஞானப் பொக்கிஷமாக விளங்குகிறது. அவர் இன்னும் அதிக நாட்கள் பரமஹம்சரைக் காணச் சென்றிருந்தால், நமக்கு இன்னும் அதிகமாக விஷயங்கள் கிடைத்திருக்கும். இவரைச் சந்தித்த பால்பிரண்டன் என்னும் மேஞட்டவர் (ஸ்ரீரமண மகரிஷியின் சீடர்), 'ஐரோப்பா இந்தியாவிற்குத் தீர்த்த யாத்திரை வருகிறது' என்னும் தனது நூலில் இவரைப்பற்றிக் குறித்துள்ளார்.

## உலக நோக்கும் போக்கும்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் தட்சிணேசுவரத்தில் காளி கோயிலில் வாழ்ந்து வந்தார். அவருடன் அவரது உறவினர் இருதயர் என்பவரும் இருந்தார்.

ஒருநாள் இருதயர் பசுங்கன்று ஒன்றை ஓட்டி வந்து, தோட்டத்தில் கட்டினர். கன்று மிகவும் சிறியதாக இருந்தது. அதை வண்டியிலோ, உழவுக்கோ பூட்டுவதென்ருல் இன்னமும் சில ஆண்டுகள் செல்லவேண்டும். தோட்டத்திலுள்ள புல்லைக் கன்று மேய்வதற்கு வசதியாக, இருதயர் கயிறு விட்டுக் கன்றைக்கட்டியிருந்தார்.

பசுவின் கன்று வந்ததைத்தான் பரமஹம்சர் பார்த்தாரே அன்றி, என்ன காரணத்தினுல் இருதயர் அதைக் கொண்டு வந்து கட்டினர் என்பது அவருக்குப் புரியவே யில்லை. ஏனெனில், தட்சிணேசுவரத்தில் காளைக் கன்று ஒன்றின் தேவை பரமஹம்சருக்கோ இருதயருக்கோ கிடையாது.

பரமஹம்சர் இருதயரிடமே, "ஏனப்பா இந்தக் கன்றை இங்கே கட்டியிருக்கிருய்?" என்று கேட்டார். இருதயர் வெகு உற்சாகத்துடன், "மாமா, இந்தக் கன்றை கிராமத்திற்கு அனுப்ப இருக்கிறேன். இது நன்ருக வளர்ந்து காளையானதும், ஏரில் பூட்டி உழவுக்குப் பயன்படுத்துவேன்" என்ருர்.

இதைக் கேட்ட பரமஹம்சருக்குப் பெருவியப்பு உண்டாயிற்று. "மனிதன் எப்போதோ நடைபெற வேண்டும் என்பதற்காக எப்படி எப்படி எல்லாம் கணக்குப் போட்டு வேலை செய்கிருன்! மாயை என்பது புரிந்து கொள்ளாதபடி மக்களை எப்படி ஆட்டி வைக்கிறது! மகாமாயை ஆகிய தேவியின் லீலை இது. கல்கத்தாவிலிருந்து வெகு தூரத்திலிருக்கிறது கிராமம். இந்தச் சின்னக் கன்றுக் குட்டி அவ்வளவு

தூரம் போக வேண்டும்! எப்படி இருக்கிறது கதை! உலகின் போக்கு இதுதான்!''

இத்தகைய சிந்தனை ஒரு கணம் பரமஹம்சரின் உள்ளத்தில் தோன்றியது. மறுகணம் தெய்விகப் பரவசத்தில் ஈடுபட்டு அவர் சமாதியில் ஆழ்ந்து விட்டார்.

நாம் நாள்தோறும் இருதயர் செய்தது போன்று பல காரியங்களைச் செய்து வருகின்றோம். சொல்லப் போனால் சர்வசாதாரணமாக, இப்படி எல்லாம் நடந்து கொண்டால்தானே வாழமுடியும் என்றும் நினைக்கின்றோம். பரமஹம்சர் நினைத்தது போன்ற வேதாந்த கருத்துகள், கனவிலும் நம் பலருக்குத் தோன்ருது.

வாழ்வின் மேலாம் படித்தரத்தில், ஆன்மீக ஞான பூமிகளில் சஞ்சரிக்கும் மனம் கொண்ட பெருமக்களுக்கு, கடவுளைப் புறக்கணித்து நாம் செய்யும் எல்லாக் காரியங்களும் குழந்தைத் தனமாகத் தோன்றுகின்றன. வள்ளுவரும் இக் கருத்தை வலியுறுத்தும் வகையில், 'ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப கோடியும் அல்ல பல' என்று கூறுகிறார்.

Grams :
"ANGUVILAS"

Regd. Numbers
12700 & 149348



Phone: 71

Estd: 1925

ஸ்தாபகர்
அங்குவிலாஸ் M. V. முத்தையா பிள்ளை, திண்டுக்கல்

அங்குவிலாஸ்
M. V. முத்தையா பிள்ளை (பர்ம்)
வாசனைப்புகையிலை
தாம்பூலத்துடன் சுவைப்பதற்கு தின்பண்டம் போன்றது

ANGU VILAS Scented Tobacco stands foremost in India. If a little of this Scented Tobacco is chewed with Betel leaves, nut and Chunnam and spit out, it will go on refreshing your mind & Body.

ANGUVILAS M. V. MUTHIAH PILLAI (FIRM)
Scented Tobacco Factory,
DINDIGUL :: TAMIL NADU

# ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி

**ஸ்ரீ தேவிதாஸன்**

"உமது ஹ்ருதய கமல பீடத்தில் உள்ள ஸ்ரீதேவியின் சரண கமலங்களை தியானம் செய்தால், அம்பாள் நீர் கோரிய பொருளை உடனே கொடுப்பாள்'' என்று ஸ்ரீநாரத மாமுனிவர், கவலையுற்றிருந்த ஸ்ரீவியாஸ முனிவருக்குக் கூறியதாக இதிகாசங்கள் கூறுகின்றன.

தெய்வத்தை ஸ்திரீ வடிவத்தில் வணங்கி வழிபடுவதை வேத சாஸ்திரம் உலகுக்கு உணர்த்தியதைப் பின்பற்றி, அம்பாளின் ரூபத்தில் தெய்வத்தை வணங்கி வழிபடுவது, நம் பாரத பூமிக்கே உரிய ஓர் தனிச்சிறப்புடைய பண்பாகும்.

வடக்கே இமயம் முதல்,தெற்கு முனைக் குமரி வரை, அவள் 'மந்த்ரிணீ'யாகவும், 'தண்டினி' யாகவும் அமர்ந்து ஆட்சி புரியும் கோலம்தான் என்னே! நம் நாட்டின் வட பகுதிகளில் காளி, துர்க்கை போன்ற ரூபங்களில் அன்னை ஆராதிக்கப் படுகிறாள். தென்னகத்தில் ஸ்ரீராஜராஜேஸ்வரி, ஸ்ரீபுவனேச்வரி, மஹாதிரிபுரஸுந்தரியாக ஸ்ரீதேவி ஆராதிக்கப்படுகிறாள்.

வினைதீர்க்கக் காசியிலே விசாலாக்ஷி! காருண்ய ரூபிணியாய்க் காஞ்சியிலே காமாக்ஷி! மந்த்ர பீடேச்வரியாக மதுரையிலே மீனாக்ஷி! அருள் வடிவினளாய் ஜம்புகேச்வரத்தில் அகிலாண்டேச்வரி! சாந்தஸ்வரூபினியாய் மைசூரிலே சாமுண்டி! கருணை வடிவினளாய்க் கன்யாகுமரி! அபயம் அளிப்பவளாய் அபிராமி! ச்ருங்கார எழிலுடனே ச்ருங்கேரி சாரதா! சிதம்பரத்தில் சிவகாமி! கேட்கும் வரமளிக்க கேரளத்தில் பகவதி!

ஸ்ரீதேவி தனது சங்கல்பத்தால் மணித்வீபம் என்னும் ஓர் எழில் நிறைந்த தீவை சிருஷ்டி செய்து, ஸகலபரிவாரங்களுடனும், மந்த்ர தேவதா சக்திகளுடனும், வாஸம் செய்வதாக "ஸ்ரீதேவீபாகவதம்" கூறுகிறது. ஸகல புவனங்களுக்கும் அப்பால், ரத்னத்வீபத்தில் "ஸ்ரீநகரம்" ஜோதிர் மயமாக விளங்குகிறது. இந்த லாவண்யமான நகரத்திலே ஜெகன்மாதா ஆட்சி புரிகிறாள். அன்னை ஆட்சி புரியும் அந்நகரத்தின் அமைப்புதான் எத்துணை எழில்நிறைந்தது!

அந்தகாரத்தை அகற்றும் சூர்ய சந்த்ரருடைய தேஜஸ்ஸி

ஞாலும், ஸ்வர்ணம், வெள்ளி போன்ற உலோகங்களிஞலும், வஜ்ர வைடூரியாதி நவரத்னங்களிஞலும் அமைக்கப்பட்ட கோட்டை கொத்தளங்கள், மதில்கள், ப்ராகாரங்கள், நந்தவனங்கள் நிறைந்தது ஸ்ரீநகரம். மும்மூர்த்திகளும் இந்த்ராதி தேவர்களும், வஸந்தருது, க்ரீஷ் மருது, வருஷருது, சரத்ருது. ஹேமந்தருது, சிசிருதுஆகிய ஆறு ருதுநாயகர்களும், தத்தம் நாயகிகளுடன் அங்கே வாஸம் செய்து கொண்டிருக்கிருர்கள்.

ஜோதிமயமான மதில்களுக்கு மத்தியில் அமைந்த சிந்தாமணி க்ருஹத்திஞுள், ஆயிரக்கால் ஸ்வர்ண மண்டபத்தின் மத்தியில் ஒளிமயமான ஸ்ரீசக்ரத்தின் நடுவில், மங்கள ஸிம்ஹாஸனத்தில், பிந்துபீடத்தில் ஸர்வாபரணபூஷிதையாக, லோகமாதா ஸ்ரீதேவி நித்யவாஸம் செய்து கொண்டு, சாலோக,சாமீப, சாரூப, சாயுஜ்ய பதவிகளைத் தன்னை தியானிக்கும் பக்தர்களுக்கு அருளிய வண்ணம் ராஜ்யபாரம் நடத்திக் கொண்டிருக்கிருள் என்பதாக, ஸ்ரீதேவி பாகவதத்தில் அன்னையின் ராஜரீகம் வர்ணிக்கப்படுகிறது.

ஸுமங்கலி, ஸுககரி, சுபகரி, ஸுவாஸினியாக அருள் உருக் கொண்ட அம்பிகையை ஆராதித்து, எத்தனையோ மஹா புருஷர்கள் அவள் அருளைப் பெற்று நற்கதிஅடைந்துள்ளார்கள்என்று இதிகாச புராணங்கள் நமக்கு எடுத்துரைக்கின்றன. சந்த்ரமண்டல வாஸினியான ஸ்ரீ தேவி சாந்த ஸ்வரூபிணியாக, தன்னை தியானிப்பவர்களுக்கு அஞ்ஞான இருளை அகற்றி, மெய்ஞான அருளை அளிக்கிருள்!

ஜெகந்நாதனுன ஸ்ரீகண்ணனுடைய ஆக்ஞைப்படி புனித பாரதப் போருக்குப் போகு முன், பார்த்தன் ஸ்ரீதேவியைப் பிரார்த்தித்து, காண்டீபம் கையிலேந்திப் போருக்குச் சென்று வெற்றிவாகை சூடியதாக, மஹாபாரத காவியம் கூறுகிறது. வாக்ஸ்வரூபிணியான ஸ்ரீமாதாவின் க்ருபா கடாக்ஷத்திஞல் உலக மஹா கவி காளிதாஸர் வாக்கு வன்மை பெற்று 'ச்யாமளா தண்டகம்' போன்ற அரும் பெரும் கவிதைகளை இயற்றியுள்ளார். ஸ்ரீதேவியைப் பூஜித்த புண்ணிய பலனுல், ருக்மிணிதேவி தன் மனேபீஷ்டப்படி கண்ணபிரானது கைத்தலம் பற்றியதாக 'ஸ்ரீமத்பாகவதத்தில்' கூறப்பட்டிருக்கிறது.

சிரேஷ்டரான குருவின் மூலமாக அன்னையின் அருளை நாடிஞல், நன்மையெல்லாம் நம்மைத் தேடிவரும். மானிட குருவின் வாயிலாக ஸநாதனமான தெய்வமே சிஷ்யனிடம் பேசிய உண்மைத் தத்துவத்தை, குரு ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர், சீடர் நரேந்திரர் (ஸ்வாமி விவேகானந்தர்) இவர்களுடைய குரு சிஷ்ய பாவனை உலகுக்குஉணர்த்துகிறது. கங்கா நதி தீரத்தில் விளங்கும் தக்ஷிணேசுவரர் ஆலயத்தில்

அன்னை காளிதேவியின் அருளைப் பருகி பக்தி நிலை எய்தியவரன்றோ பரமஹம்ஸர்!

“கடவுளை நீர் கண்டதுண்டா?” என்று கேட்ட நரேந்திரருக்கு, “அகக்கண்களால் ‘அவளை’ நான் காண்கிறேன்” — என்று பதிலுரைத்த பரமஹம்ஸர் தன் அருட் கரத்தினல், நரேந்திரரின் நெஞ் சத்தை தொட்டார். ஏதோ ஓர் சக்தியால் தாக்கப்பட்ட ஓர் அதிர்ச்சிநிலை நரேந்திரருக்கு உண் டாயிற்று! ஆம்! — தாய் சக்தி தேவியின் தெய்வீக சக்தி அக்க ணமே நரேந்திரர் உள்ளத்திலும் ஒளி வீசிப் பிரகாசிக்கத் தொடங் கியது!

குருவே தெய்வம்! — தெய்வீக குருவினிடமிருந்து உபதேசம்!

குரு உபதேசிப்பது மந்த்ரம்! அந்த மந்த்ரமே தெய்வீக சக்தி!

தேவதா சக்தியால் ஸித்தி!

இந்த உண்மைத் தத்துவத்தை உணர்ந்து, குருவின் வாயிலாக மந்த்ரங்களை உபதேசம் பெற்றுப் பக்குவநிலை அடைந்த ஸாதகனு டைய ஸாதன சக்தி, மந்த்ர சக்தி யில் ஒன்றுபட, அப்போது தெய்வீக சக்தி பக்தனைக் கை கொடுத்து ஆட்கொள்ளுகிறது.

நம்முடைய ஹ்ருதயகமலத்தில் நித்யவாஸம் செய்து கொண்டி ருக்கும் ஸ்ரீதேவியின் சரண கம லத்தை ஸதா காலமும் தியானம் செய்துகொண்டு, பொருளுக்கும் புகழுக்கும் இச்சை கொள்ளாத மனேபாவத்துடன் அம்பிகை யைப் பூஜித்து, அவளது பரிபூர்ண கடாக்ஷத்தை அனைவருமே அடை யலாம்.

‘மாத்ருகா’ என்ற அக்ஷரங்கள் வடிவினளான அம்பிகையை, அக்ஷரங்களான ஸ்தோத்திரங்க ளால் பாராயணம் செய்து பூஜித்து வணங்கினல், பாபங்கள் எல்லாம் நீங்கி, நற்பயனும் நல் வாழ்வும் பெறுவது உறுதி.



---

கடவுளிடம் நம்பிக்கையற்றவனை நாஸ்திகன் என்றன பண்டைய மதங்கள், தன்னிடம் நம்பிக்கையற்றவனே நாஸ்திகன் எனப் புதிய மதம் புகட்டுகின்றது.

# தமிழர் தத்துவம்

செல்வி இரா. கமலா

கீழை நாட்டு மக்களாகிய நமது தனிப் பெரும் உடைமையாக விளங்குவது தத்துவமே. தத்துவம் என்ற சொல்லுக்கு உண்மை என்பது பொருளாகும். அவ்வுண்மைதான் யாது?

"பாங்கருஞ் சிறப்பில் பல்லாற்றானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே"

என்று இவ்வுலக நிலையாமையை உணர்த்துகின்றது தொல்காப்பியம். "இந் நிலையிலா உலகில் நிலைத்த பொருளும் உளதோ? உளதாயின் அது எது?" என்பதை அறிவதே மெய்யறிவு (தத்துவ ஞானம்) ஆகும்.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப் பொருள் காண்பதறிவு" அன்றோ!

இவ்வுலகமாகிய நாடகமேடையில் ஒவ்வொரு உயிரும் தன்பங்கினை ஏற்று நடிக்கின்றது. அப்பணி முடிந்ததும், வேடம் கலைக்கப்பட்டு, மேடையைவிட்டு அகல்வது போல் உலகிலிருந்து மறைகின்றது.

இந்நிலையா உலகின் பெருமையை, வான்புகழ் வள்ளுவர்,

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும் பெருமை உடைத்திவ்வுலகு" என்றுரைக்கிறார்.

அவ்வாறாயின் நிலைத்த பொருள் யாது? அதனை அடைய யாது செய்யவேண்டும்?

இந்து மதத்தின் பல்வேறு சமயங்களும், இறைவனே நிலைத்த பொருள் என்றுரைக்கின்றன. பௌத்தம், சமணம் போன்ற சமயங்கள் கடவுள் உண்டு என்பதை மறுத்தாலும், மனிதனுக்கும் மற்றுமுள்ள உயிர்களுக்கும் அப்பாற்பட்ட ஒரு தனி சக்தி உள்ளதென்பதை ஒத்துக் கொள்கின்றன. அச் சக்தியைத் தான் தமிழ் மக்கள் "தே" என்றும், "இறைவன்" என்றும், "கடவுள்" என்றும் அழைத்தனர்.

அவ்விறைவனை அகவாழ்வின் உச்சியில் நின்று அவனருள் பெற்றுக் கண்டுய்ந்த அடியார் பற்பலர். மற்றும் துறவு வாழ்வு நாடாத்திப் பற்றற்றான் பற்

றினைப்பற்றிப் பற்று விட்ட வரும் பலர் ஆவர்.

இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளான். இன்பத்தின் எல்லையில் நிற்கின்ருன். எச் சமயத்தினரின் கருத்துக்களுக்கும் இசைந்தவனுக உள்ளான். இருள்சேர் இருவினையும் சேராதவனுக உள்ளான். அவன் வகுத்த வழியே வையகம் இயங்குகின்றது.

"வகுத்தான் வகுத்த வகை
யல்லாற் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்த
லரிது." அல்லவா?

ஊழ்வினையில் நம்மக்கள் பெரிதும் நம்பிக்கை உடையவர்கள். நாம் செய்யும் வினைகளுக்கேற்ப இன்பதுன்பங்கள் அமைவதை வற்புறுத்தினர் அவர்கள்.

"ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும்" என்ற கொள்கைக் காகவே சிலப்பதிகாரம் எழுந்த தன்ருே!

உலகில், பற்றுக்காரணமாக வாழ்வில் ஏற்படும் இன்னல்கள் பல! இதனை மணிமேகலை,

"துன்பம் தோற்றம் பற்றே
காரணம்
இன்பம் வீடே பற்றிலி கார
ணம்."

என்று தெளிவுறுத்துகிறது.

பிறவிக் கடலைக் கடக்கும் வழிகளையும் நம் அறிஞர்கள் காட்டியுள்ளனர். அதனைக் கடக்க முயலும் அறிவே மெய்யறிவு என்பதை, உலகப் பொதுமறை,

"பிறப்பென்னும் பேதமை
நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பதறிவு"

என்று விளக்குகின்றது.

இம் மெய்யறிவினை மறைப்பது மாயை ஆகும். அம்மாயை "யான் எனது" என்னும் உணர்வுகளின் காரணமாகத் தோன்றுவதாம். இதனை ஒழித்தவர் வானோர்க்கும் உயர்ந்த உலகைப் பெறுவர் என்பதை வள்ளுவர்,

"யானெனதென்னுஞ் செருக்
கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்"

என்கிருர்.

உலகில் இசைபட வாழ்வாரே வாழ்பவராவர். அவ்விசையாம் புகழிற்கு வழி யாது? அறமே சிறந்த வழியாகும்.

"சிறப்புடை மரபின் பொரு
ளும் இன்பமும்
அறத்து வழிப் படூஉம்."

எனவே, அவ்வற வினையை ஒல்லும் வகையான் செல்லும் வாயெல்லாம் செயல் வேண்டும்.

இவ்வுலகு ஏன் இன்னும் வாழ்கின்றது என்பதை, கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி ஒரு பாடலால் காட்டுகின்றனன். அப்பாடலாவது:

"உண்டாலம்ம இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவது ஆயி னும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலுமிலர் பிறரஞ் சுவ தஞ்சி
புகழெனின் உயிரும் கொடுக் குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள் ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி அனையராகித்
தமக்கென முயலா நோன் தாள்
பிறர்க்கென முயலுநர் உண் மையானே!"

தத்துவம் என்பது மெய்ப் பொருள். உலகம் நிலையாமை யுடைத்து, நிலைத்த பொருள் இறைவனே! வினைவழி இறப்பும். பிறப்பும் அமைகின்றன. ஊழ் வினை உருத்து வந்து ஊட்டு கின்றது.

"எல்லோரும் இன்புற்றிருக்க
நினைப்பதுவே அல்லாமல்
வேறொன்றறியேன் பராபரமே"

எனச் சிந்தனையைச் செழிக்கச் செய்து, நாம் எல்லோரும் உய் தியுற இனிதே வழி தேடி வாழ் வோமாக!




நீங்கள் அதிர்ஷ்டசாலிகளா?
உங்களுக்கு மன நிம்மதி வேண்டுமா?
நீங்கள் நினைத்த காரியம்
வெற்றியடைய வேண்டுமா?



பிரபல கைரேகை நிபுணர்
K. நடராஜ்

பிரபல
கைரேகை நிபுணர்
K. நடராஜ்
சென்னையில் ஸ்வாகத்
ஹோட்டலில் தங்கியுள்ளார்
ஆதலால் உங்கள் முக்கால
பலன்களையும் அறிய
உடனே சந்தியுங்கள்
K. நடராஜ்
(PALMIST)
ROOM No. 7
ஹோட்டல் ஸ்வாகத்
ராயப்பேட்டை, சென்னை-14
டெலிபோன்: 82027

# சிரத்தை

## ஸ்வாமி ஸ்ரீ விவேகானந்தர்

இறைவனிடத்தே நம்பிக்கை கொள்க.

எவரது துணையையும் பொருட்படுத்தாதீர். மனிதத் துணையனைத்தையும் காட்டிலும், இறைவன் வரம்பு கடந்த பெருமையை உடையோ னன்றோ!

தூய்மை பெறுக; இறைவன் பால் நம்பிக்கை கூர்க; அவனையே எப்போதும் சார்ந்து நிற்க; அப்போது நன்னெறியிலே நிற்பீர்; யாதொன்றும் உம்மை வெல்ல மாட்டாது.

* * *

கீழ்ப்படியும் குணத்தை வளர்த்து வா; ஆனால் உன்னிடத்துள்ள நம்பிக்கையை நீ துறந்துவிடக்கூடாது. அதிகாரிகட்கு அடங்கினாலன்றி, அதிகாரத்தை ஓரிடத்தே தொகுத்து வைக்கும் முறை வாழ இயலாது. தனி மனிதரின் சக்திகளை இவ்வாறு ஓரிடத்தே தொகுத்து வைக்கும் முறையின்றி, எப்பெருங் காரியமும் இயற்றல் இயலாது.

உங்களில் ஒவ்வொருவரும் பெரு வலி படைத்தவராதல் வேண்டும். இது கட்டாயம் என்றே யான் கூறுகின்றேன். கீழ்ப்படிவு, ஆயத்தமாதல், எடுத்த கருமத்துப் பிரியம்— இம் மூன்றும் உங்களிடம் இருப்பின், எதுவும் உங்களைத் தடை செய்யாது.

* * *

காற்றுள்ள போதே தூற்றிக் கொள். சோம்பல் உதவாது. பொறுமையையும் ஆணவத்தையும் பற்றிய கருத்தையெல்லாம், ஒரேயடியாகத் தூர எறிந்துவிடு. உன் முழு வலிமையோடும் கருமம் இயற்றும் பொருட்டு, ஏராளமான ஆவலோடு, தொழிற்களத்திற்கு முன்வருக. வேறு கவலையேன்? இறைவனே வழி காட்டுவான்.

எதனையும் பரபரப்புடன் இயற்றுதல் தகாது. தூய்மை, பொறுமை, விடாமுயற்சி—இம் மூன்றும் வெற்றிக்கு இன்றியமையாதவை. அனைத்துக்கும் மேலாக, அன்பும் வேண்டும். காலம் முழுவதும் உன்னதே; அழகற்ற பரபரப்பு வேண்டா.

தம்மிடத்து நம்பிக்கைகொள்பவரே, பெருமையும் வலிமையும்

எய்தியுள்ளனர். எந் நாட்டுச் சரிதையிலும், என்றைக்கும் காணப்படுவது இதுவே.

விருப்பம் ஒன்ருலேயே பெருமையெய்தல் ஒருவற்கு இயலாது என்பதையும், இறைவன் எவனே உயர்த்துவானே அவனே உயர்வான் என்பதையும், இறைவன் எவனே வீழ்த்துவானே அவன் வீழ்வான் என்பதையும், அனைவரும் ஒரு நாள் ஒரு கணப் பொழுதளவு உணர்வாராயின், அதன்பின் துயரமனைத்தும் முடிவடையும்.

இறந்தார் என்றும் மீளார்; கழிந்த இரவு மீண்டும் தோன்றுவதில்லை; மாய்ந்த பேரலை புதிதாகக் கிளம்புவதில்லை. அதுபோல், மனிதனும் அதே உடலில் மறுபடியும் புகுவதில்லை.

ஆதலால், மனிதனே, இறந்த காலத்தை வழிபடுவதை விட்டு, நிகழ்காலத்தை வழிபடுமாறு உன்னை அழைக்கின்ருேம். கழிந்ததைக் குறித்து வருந்தலைத் தவிர்த்து, தற்கால முயற்சிகளில் ஈடுபடுமாறு உன்னை அழைக்கின்ருேம்.

மறைந்தும் அழிக்கப்பட்டும் ஒழிந்த பாதைகளைத் தேடித் திரும்பவும் கண்டுபிடித்தலில் ஆற்றலை வீணுக்குவதை விட்டு, அண்டையிலுள்ள அகன்ற புதிதாயமைத்த பாதைகளைச் சாருமாறு உன்னை அழைக்கிருேம். புத்தியுள்ளவன் இதனை அறிவானுக.

மெய்யான சிரத்தையைப் பற்றிய கருத்தை, மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டும். நம்மிடத்துள்ள நம்பிக்கையை மறுபடியும் விழித்தெழச் செய்ய வேண்டும். அதன் பின்னரே நமது நாட்டினர் முன்பு நிற்கும் சங்கடங்கள் அனைத்தையும், நாமே மெல்ல மெல்லத் தீர்த்துவிடலாம்.

கட உபநிடத்தே காணும் அப் பெருமையார்ந்த மொழியாகிய சிரத்தை என்பது, என் நினைவிலே எழுகின்றது. சிரத்தையாவது வியக்கத்தகும் விசுவாசமே! சிரத்தையைப் போதித்தலே—அதாவது, உண்மையான நம்பிக்கையை ஊட்டுதலே— எனது வாழ்க்கைத் தொண்டாகும்.

மக்களிடத்தும் எல்லா மதங்களிடத்தும் அமைந்துள்ள திறன் மிகுந்த பகுதிகளுள் ஒன்று, இந்த சிரத்தை என்பதை நான் மீண்டும் உங்கட்குக் கூறுவேன்.

முதலிலே, உங்களிடத்தே நம்பிக்கை கொள்ளுங்கள். செல்வத்தாற் சிருற்ருரையும் பணக்காரரையும் எதிர்பாராதீர். உலகிலுள்ள மிக மிகப் பெரிய காரியங்களை இயற்றியவர் ஏழைகளே!

நிலைத்திருமின்! எதற்கும் மேலாக முற்றிலும் தூய்மையும் உண்மையும் உடையவராகுமின். உமது விதியில் நம்பிக்கை கொள்வீராக.

சிந்தனையின்மை, நமது நாட்டு மக்களின் உதிரத்தே ஊர்ந்து வரும் பயங்கரமான நோயே இது. இதை விட்டொழிக. பல வானுகுக. இந்த சிரத்தையைப் பற்றுக. ஏனைய யாவும் பின்வருவது உறுதி.

உன்னை ஏழையாகவும், நண்பரில்லாதவனாகவும் நினையாதே. பணம் மனிதனைப் படைத்ததை எவனேனும் கண்டதுண்டா? மனிதனே பணத்தை எப்போதும் படைப்பவனாவான். உலக முழுவதும் ஆக்கப்பட்டது மனிதனது ஆற்றலாலும், ஊக்கத்தின் சக்தியாலும், நம்பிக்கையின் வலிமையாலும் என்க.

கடலனைய ஆழமும் எல்லையற்ற வானம் போன்ற அகலமும்— இம்மாதிரியான நெஞ்சமே நமக்குத் தேவை.

உனது இலக்ஷியத்தினிடத்துப் பெரிதும் ஈடுபடல் வேண்டும். அமைதியாகவும், உலையா முயற்சியோடும், நிலையாகவும் ஈடுபடல் வேண்டும். சாதகப் புள் இடி மின்னல்கட்கு இடையிலும் ஆகாயத்தை அண்ணாந்து நோக்கிக் கொண்டு, மேகத் துளியையன்றி வேறொரு நீரைக் குடிக்க விரும்பாது. அத்தகைய ஈடுபாடு வேண்டற்பாலது.

தூய்மையை நாடும் போராட்டத்தில் அழியினும் அழிக! ஆயிரம் முறையும் மரணத்திற்கு நல்வரவு கூறுக. தளர்வுறுதே. நல்லமுதம் பெறற்கரியதாயினும், நஞ்சுண்ணக்காரணம் உண்டோ? கொள்கைகளையோ நம்பிக்கைகளையோ, மதப் பிரிவுகளையோ பொருட்படுத்தாதே! ஒவ்வொரு மனிதனது வாழ்க்கையிலும் சாரமாய் அமையும் ஞானத்தோடு ஒப்பிட்டு நோக்குங்கால், அவை என்னும்?

ஒரு மனிதனிடத்து இந்த ஞானம் முதிரும் அளவிற்கே நலம் புரியும் ஆற்றல் அவன்பால் மிகுகின்றது. முதலில் இதனையே தேடிப் பெறுக; இதனையே அடைக.

எவரையும் குறைகூறுதே; ஏனெனில் எல்லாக் கொள்கைகளிடத்தும் முடிபுகளிடத்தும் சிறிது நன்மையுள்ளது. சமயம் என்பது மொழியுமன்று, பெயருமன்று, கட்சியுமன்று. மெய்யுணர்வே அதன் கருத்தாகும். இதை உனது வாழ்க்கையிற் காட்டுக. உண்மையும் தூய்மையும் வெற்றியளிப்பது திண்ணம். இவ்விரண்டையும் படைக்கலமாகக் கொள்ளும் சிறுபான்மையோரும், எத்துணைய வலியையும் எதிர்த்து வெற்றியடைவது மாறுத விதியாகும்.

உண்மை, தூய்மை, தன்னலமின்மை — இம்மூன்றும் உள்ளவிடத்தெல்லாம், அவற்றைஉடையாரை நசுக்கும் ஆற்றல், கதிரவனது மண்டலத்தின் கீழோ மேலோ இல்லையென்றறிக. இவற்றைப் பெற்றுள்ளவன் ஒருவனேனும், உலக முழுதையும் எதிர்த்து நிற்கும் திறனுடையவனாவான்.

எழுமின்! விழுமின்! குறிக்கோளை அடையும்வரை நில்லாது செல்மின்!



# யானை நாராயணனும் மாவுத்த நாராயணனும்!



பகவான்
ஸ்ரீ ராமகிருஷ்ண
பரமஹம்ஸர்

ஆத்ம சாதனங்கள் பயின்று அருள்தாகம் பிடித்திருக்கின்றவனுக்கே இறைவனுடைய அருள் வருகிறது.

உள்ளத்திலுள்ள ஐயங்கள் அகலுதற்கு இறைவனுடைய அருள் முற்றிலும் அவசியமானது. ஆத்மஞானம் வருதற்கு முன்பு ஐயங்கள் அகன்று போவதில்லை.

புழுக்கமாயிருக்கும்பொழுது விசிறிவேண்டியிருக்கிறது. ஆனால் தென்றல் வீசும்பொழுது விசிறியை வைத்துவிடலாம். ஈசன் அருள், தென்றல் போன்றது. அதை அடையப்பெற்றவர்கள் ஆத்மசாதனத்தை நிறுத்திவிடலாம்.

சுகதேவரிடத்திலும் அவர் போன்ற மேலோரிடத்திலும், மக்களுக்கு ஈசுவரனைப் பற்றி நல்லுபதேசம் செய்யவேண்டும் என்னும் கருணை இருந்தது.

விக்கிரக ஆராதனை தவறானது என்று நாம் கருதலாம். ஆனால் கடவுள் அதைத் தமக்குரியதென ஏற்றுக்கொள்கிறார். ஏனென்றால், ஆராதனைகளெல்லாம் தம்மைக் குறித்து அமைந்துள்ளன என்பதை அவர் நன்கு அறிகிறார்.

ஒருவன் ஏதோ சிறிதளவு ஆத்ம சாதனங்கள் செய்துவிட்டு, தான் அத்துறையிலே வெற்றி மிகப் பெற்றிருப்பதாக எண்ணிக் கொள்கிறான். உண்மையில் அவன் ஒரு வெற்றியும் பெறவில்லை. வெற்றியும் தோல்வியும் சர்வேசுவரன் கையிலிருக்கிறது; மக்களிடத்து அல்ல. வேசி ஒருத்தி தனது அந்திய காலத்தில் ஆற்றங்கரையில் பூரணப் பிரக்ஞையோடிருந்து பிராணனை விட்டதை நான் பார்த்திருக்கிறேன்.

முற்றிலும் ஆத்மபோதம் எழப் பெற்ற மேலோர், பாப புண்ணியத்துக்கெல்லாம் அப்பாற்பட்டவர்களாக இருக்கிறார்கள். செயலனைத்தும் ஈசனுடையதே என்னும் எண்ணத்திலும் அவர்கள் நிலைத்திருக்கிறார்கள்.

தட்டான் ஒருவன் தங்கத்தை உருக்கும் பொழுது வாயால் ஊதுகிறான்; விசிறியால் வீசுகிறான்; துருத்தியையும் பயன்படுத்துகிறான். தங்கத்தை உருக்கிக் கருவில் வார்த்தான பிறகு அவன் ஓய்வெடுத்துக் கொண்டு அமைதியாயிருக்கிறான்.

அதே விதத்தில், இறைவனுடைய அருளைப் பெறுதற்கு முன்பு எல்லா விதமான சாதனங்களையும் சாதகன் கையாளவேண்டும். அருளைப் பெற்றான பிறகு அவைகளெல்லாம் தாமாக நின்றுவிடுகின்றன.

ஜமீன்தார் ஒருவர் சாதாரண குடிமகன் ஒருவன் வீட்டுக்கு வருவதாயிருந்தால், அதன் அறிகுறிகள் முன்னதாகவே தென்படும். வீடு நன்றாகத் துப்புரவு செய்யப்படும். ஜமீன்தார் உட்காருகிற நாற்காலி முதலியன முற்கூட்டியே அங்கு வந்து சேரும். அந்த அறிகுறிகளைப் பார்த்தால் இனி ஜமீன்தார் அங்கு வரப்போகிறார் என்று யூகிக்கலாம்.

அதே விதத்தில், பக்தன் ஒருவனுடைய உள்ளத்தில் தெய்விக இயல்புகள் தோன்ற ஆரம்பிக்கும்பொழுது, அவன் உள்ளத்தில் தெய்வம் விரைவில் எழுந்தருளுவார் என்று யூகிக்கலாம்.

பூமியினின்று வெளியே கிளம்புகிற ஊற்றானது, சில வேளைகளில் அடைபட்டுக் கிடக்கிறது. அது இருக்குமிடம் தற்செயலாய் ஒருவன் காலில் படும்பொழுது, மூடியிருக்கும் மண் விலகிப் போய் விடுகிறது. பொங்கித் ததும்பிக் கொண்டு நீர் வெளியே வருகிறது. இவ்வளவு நீர் இவ்வளவு காலம் எங்கே மறைந்து கிடந்தது என்று மக்கள் வியப்படைகின்றனர்.

அதே விதத்தில், சிலர் பிறப்பெடுத்த கொஞ்ச காலத்தில் விவேகம், வைராக்கியம், பக்தி. விசுவாசம், அருள்தாகம் ஆகிய

தெய்வீக இயல்புகளை ஏராளமாக அடைந்திருக்கிறார்கள். அவர்களிடத்து அப்படித் தோன்றுகிற பாரமார்த்திகப் பேரியல்புகளைப் பார்த்து, மக்கள் பெருவியப்படைகின்றனர்.

ரிஷி ஆச்ரமம் ஒன்றில் வேதாந்த விசாரம் நடந்தது. உயிர்கள் அனைத்தும் நாராயண சொரூபம் என்று குரு உபதேசித்தார். அதன் பிறகு ஒருநாள் சிஷ்யர் சிலர் வனத்தில் விறகு சேகரித்துக் கொண்டிருந்தனர்.

"அப்பால் ஓடிவிடுங்கள்; மத யானை வருகிறது" என்னும் உரத்த எச்சரிக்கை ஒன்று வந்தது. எல்லோரும் ஓட்டம்பிடித்து விட்டனர். ஆனால் ஒரு சிஷ்யன் மட்டும் அவ்விடத்தை விட்டு நகரவில்லை.

"இது மதம் பிடித்த யானை; வழியில் நில்லாதே" என்று யானைப் பாகன் கத்தினான். ஆனால் சிஷ்யனோ அவ்விடத்தை விட்டு நகரவில்லை. அருகில் வந்த யானை துதிக்கையால் அவனைச் சுழற்றி எடுத்து ஒருபுறம் வீசியெறிந்து விட்டுப் போய்விட்டது. சிஷ்யன் காயப்பட்டு பிரக்ஞை யற்றுக் கிடந்தான்.

இதைக் கேள்விப்பட்ட ஆச்ரம வாசிகள், சிகிச்சை செய்து பிரக்ஞை வரப் பண்ணினார்கள்.

"ஏன் அப்பா உனக்கு இந்த கதி?" என்று குரு கேட்டார்.

"எல்லாம் உங்கள் உபதேசத்தின் விளைவு" என்றான் சிஷ்யன்.

"அதை விளக்கிச் சொல்" என்றார் குரு.

"உயிர்கள் அனைத்தும் நாராயண சொரூபம் என்று புகட்டினீர்கள். யானை நாராயணனை நான் சேவித்ததின் விளைவு இது" என்றான் சிஷ்யன்.

"பின்பு மாவுத்த நாராயணன் எச்சரிக்கைக்கு நீ ஏன் செவி கொடுக்கவில்லை?" என்றார் குரு.

அரைகுறை ஞானத்தின் விளைவு இதுவேயாம்.

கிணறு வெட்டியான பிறகு, மண்வெட்டி, கூடை முதலியவைகளைப் பெரும்பாலர் களைந்துவிடுகின்றனர். ஆனால் ஒரு சிலர், அவைகளை மற்றவர்கள் பயன்படுத்துதல் பொருட்டு வைத்திருக்கிறார்கள்.

அதேவிதத்தில், ஞானிகள்பலர் சுவானுபவத்துடன் அனைத்தையும் முடித்துவிடுகின்றனர். வேறு சிலர், தாங்கள் பெற்ற சுவானுபவத்தை மற்றவர்களும் பெற வேண்டும் என்று அக்கறையெடுத்துக்கொள்கின்றனர்.

உலகத்தவர் படுகின்ற துன்பங்களைப் பார்க்கிற பெரியோர்கள், அன்னவர்களுக்கு இறைவனை அடைவதற்கான வழியைக் காட்டித் தருகின்றனர். சங்கரரும் சைதன்யரும் பரம் பொருளை

அடைவதற்கான வழியையே பொது மக்களுக்குக் காட்டியருளினர். சங்கரர் ஞானத்தை நல்கினர். சைதன்யர் பக்தியை வழங்கினர்.

சுகப் பிரம்மம் நிர்விகல்ப சமாதி அல்லது ஜட சமாதியில் மூழ்கிக் கிடந்தார். பரீட்சித்துக்கு பாகவதம் பகரவேண்டிய பொறுப்பு அவருடையதாயிருந்தது. ஆனுல் அவர் மனதோ, கீழ் நிலைக்கு இறங்கி வந்த பாடில்லை.

நாரதர் அவர் முன்னிலையில் வந்து நின்றுகொண்டு, நாராயணனுடைய மகிமைகளைப் புகழ்ந்து பாடினர்.

முதல் பாட்டைக் கேட்டதும் சுகப்பிரம்மத்தினுடைய உரோமம் சிலிர்த்தது; இரண்டாவது பாட்டைக் கேட்டதும் கண்களினின்று ஆனந்த பாஷ்பம் உருண்டுவந்தது; ஜட சமாதியிலிருந்தவர் ஹரியின் சௌந்தர சொரூபத்தைத் தம் உள்ளத்தினுள் தரிசித்தார். பிறகு தாம் தரிசித்ததை யெல்லாம் அவர் பகர்ந்தருள வேண்டியதாயிற்று.

கேசவ சந்திரசேனர் வைதிக மதத்தினின்று வழுவி பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவர். ஜாதிக் கட்டுப்பாடுகளைப் புறக்கணித்தவர். தன் புதல்வியை வேறு ஒரு ஜாதியைச் சேர்ந்த ஆடவனுக்கு மணம் முடித்துக் கொடுத்தவர். ஆதலால் அத்தகைய பதிதனிடத்து பரமஹம்ஸதேவர் தொடர்பு வைத்துக் கொள்ளலாகாது என்று கேப்டன் விசுவநாதர் ஆட்சேபம் செய்தார்.

அதற்கு பரமஹம்ஸர், "கேசவருடைய லௌகிகப் பழக்க வழக்கங்களைப் பற்றி எனக்கு அக்கறையில்லை. அவர் புதல்வியை யாருக்கு வேண்டுமானுலும் மணம் முடித்துக் கொடுக்கட்டும். அவர் கடவுள் திருநாமத்தை பக்தி விசுவாசத்துடன் ஓதுகின்ருர். அந்த அருள் விருந்தில் கலந்துகொள்வதற்கு நான் அவரிடம் கட்டாயம் போவேன். பணம் காசு முதலியவைகளை நாடி நான் அவரிடம் போகக் கிடையாது. ஆனுல் கேப்டன் விசுவநாதரே, உம்முடைய செயலை ஆராய்ந்து பாரும். நீர் ஏன் ஆங்கில ராஜப்பிரதிநிதியிடம் அவ்வளவு அக்கறையுடன் ஓடுகின்றீர்? அவர் மிலேச்சன். அவருடைய ஆசாரம் வேறு; மதம் வேறு. அத்தகையவரிடம் கூப்பிட்டபொழுதெல்லாம் ஓடுகின்றீரே, இது உமக்கு ஒவ்வுமா?" என்ருர்.

கேப்டன் விசுவநாதர் பதில் சொல்லமுடியாது மௌனமாய் இருந்துவிட்டார்.

மனிதனுக்கு இச்சா சுதந்திரம் உண்டா? தன் விருப்பப்படி அவன் நலத்தையோ கேட்டையோ செய்யும் உரிமை உடையவனு?

எல்லாம் ஈசனுடைய இச்சை. பிரபஞ்சம் முழுதும் ஈசனுடைய லீலை. பெரியவை சிறியவை, நல்லவை கெட்டவை ஆகிய அனைத்தையும் தமது மாயாசக்தியால் இறைவன் படைத்துள்ளார்.

ஒரு தோட்டத்திலுள்ள மரங்களெல்லாம் ஒரேவிதமானவைகளாய் இருப்பதில்லை. ஈசுவரானுபூதி வரும்வரையில், தனக்கு இச்சா சுதந்திரம் இருக்கிறதென்று மனிதன் எண்ணிக் கொண்டிருக்கிறான். இத்தகைய அக்ஞானத்தை மனிதனுடைய உள்ளத்தில் இறைவன் வைத்துள்ளார்.

எல்லாம் ஈசன் செயல் என்பதை ஞானம் அடையாதவர்கள் அறிந்துகொண்டால், உலகில் பாபம் அதிகரிக்கும். பாபத்துக்கு மனிதன் அஞ்சவும் மாட்டான். எல்லாம் ஈசன் செயலாதலால் மனிதனைத் தண்டிப்பதில் அர்த்தமில்லை யென்கிற எண்ணமும் வந்துவிடும். ஈசுவரானுபூதியை அடைந்தானபிறகு, "ஈசா, நீ கர்த்தா, நான் கருவி. நீ வீட்டில் குடியிருப்பவன்; நான் வீடு. நீ ரதத்தைச் செலுத்துபவன், நான் ரதம். நீ ஆட்டுவித்த பிரகாரம் நான் ஆடுகிறேன்" என்னும் எண்ணம் உறுதிபெறுகிறது.




நறுமணம் கமழுவது




அசோகா

பாக்குத்தூள்

தூக்கங் கெடுத்தான் சுகங்கொடுத்தா னென்னுளத்தே
ஏக்கந் தவிர்த்தா னிருளறுத்தான்—ஆக்கமிகத்
தந்தா னெனையீன்ற தந்தையே யென்றழைக்க
வந்தானென்னப்பன் மகிழ்ந்து. —திருவருட்பா

# திருவள்ளுவரும் பரமஹம்ஸ தேவரும்

திரு. ஆர். சேது, எம். ஏ.

உலகம் உய்ய உயர்நெறிகளை எடுத்துரைத்த அறவோராவர் தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனரும், பகவான் இராம கிருஷ்ணரும். இவ்விருவரது எளிய வாழ்வும் சீரிய சிந்தனையும் பயன் நிறைந்தவை; பாரிலுள்ளோர் வாழ்வில் கடைப்பிடிக்கத் தக்கவை.

கடலினும் பெரிதாய், வானினும் உயர்வாய் அமைந்த இவ் அருளாளர் வாழ்வை, முற்றும் அறிதல் என்பது இயலாத தொன்று. அறிந்ததாக உரைப் பவை யெல்லாம், கவிச்சக்கர வர்த்தி கம்பன் கூறியது போல், 'தேர்ந்ததே தேரின் அல்லால் யாவரே தெரியக் கண்டார்' என்ற ஒரு சார்பு பற்றிய உண்மைகளே.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் னுல் வாழ்ந்த வள்ளுவரைப் போற்ருத புலவரில்லை. அவரது குறள்களை எடுத்தாளாத ஏடுகள் இல்லை. திருக்குறள் பெற்றிருப் பதுபோல் அவ்வளவு உரைகள் வேறு எந்த நூலுக்கும் இல்லை. பழங்காலத்தில் பத்து உரைகள் இருந்தன. இன்றும் புத்துரைகள் மிகப்பல தோன்றிக் கொண்டே யிருக்கின்றன. எனினும், திரு வள்ளுவரின் உள்ளக் கருத்தினை நாம் முழுமையாக அறிந்தது போன்ற நிறைவு இன்றும் ஏற்பட வில்லை. குறள் வேதப் பொரு ளாய் மிக விளங்கி, மதிப்புல வோர்க்கு ஆயுந்தோறும் ஊறும் அறிவூற்று. அறிதோறும் அறி யாமையைக் காட்டி நிற்கும் பெருநூலின் முழுமையையாரால் அறிய இயலும்!

அதேபோல் பகவான் இராம கிருஷ்ணரும், கற்றுர் அறிவுக்கும் உற்றுர் உணர்விற்கும் அப்பாலே விளங்கும் தெய்வ ஒளி. சுவாமி விவேகானந்தர், பகவான் இராம கிருஷ்ணரைப் பற்றிக் குறிப் பிடுகின்றபோது, "அவர் இவ் வையகத்திற்கு அளித்துள்ள ஞானப் பொக்கிஷத்தைப்பற்றிப் பலர் பலவாறு உரைக்கின்றனர். அவ்வாறு உரைப்பன வெல்லாம் ஒரு சார்பு பற்றிய உண்மைகளே. ஒவ்வொருவரும் தம்முடைய அறிவு, ஆற்றலுக்குத் தக்கபடி அவரைப்பற்றி அறிந்தவற்றைக் கூறுகின்றனர். அதில் தவறென்று

மில்லை. ஆனால் இந்தப் பக்தர்களில் யாரேனும் அவரை முழுமையாக அறிந்திருக்கின்றோமென எண்ணினால், அது தவறுடையதாகும். ஏனெனில் வாழ்க்கை முழுவதையுமே தவத்தில் கழித்த எங்களாலேகூட அவரைப்பற்றிச் சிறிதும் உணரமுடியவில்லை'' என்கிறார்.

ஒவ்வொருவருடைய ஆற்றலுக்கு ஏற்ப நிறைவுதருகின்ற பகவான் இராம கிருஷ்ணரை முழுமையாக அறிவதென்பது இயலாததாகும். இவ்விரு அருளாளரும், கற்றோராலும் தத்துவ ஞானிகளாலும் அறிய முடியாத ஆழத்தில் வீற்றிருக்கிறார்கள்.

இவ்விருவரும் காலத்தால் முற்றிலும் வேறு பட்டவர்கள். ஆனால் இவ்விருவருக்கிடையே கருத்தால் பல ஒற்றுமைகளைக் காணமுடிகிறது. இவ்விருவரும் காலத்தால் அழிந்து விடாத அடிப்படை உண்மைகளை எடுத்துரைக்கிறார்கள். இவ்விருவரும் காலத்தை உருவாக்கியதோடு, காலத்தாலும் படைக்கப் பட்டவர்களாவர்.

வள்ளுவர் தம் குறளில் எல்லா இடங்களிலும் அறம் அடிப்படையாக அமையவேண்டுமென்பார். 'அறன் வலியுறுத்தல்' எனத் தனி அதிகாரமும், 'அறத்துப்பால்' என்ற தனிப்பாலும் இதற்குச் சான்று. கள்ளுண்ணுதல், சூது போன்ற தீய வழக்கங்களை வள்ளுவர் கண்டித்ததுபோல் அவருக்கு முந்திய எந்தப் புலவரும் கடிந்துரைத்தாகச் சான்றில்லை. இதனை நோக்கும்போது, திருக்குறள் தோன்ற அன்றையச் சூழ்நிலை காரணமாக அமைந்ததோ என்று எண்ணத் தோன்றுகிறது.

வள்ளுவருக்கு முன் தமிழும் தமிழ்ப் பண்பாடும் தமிழ் நிலத்தில் உலவியதற்குச் சான்றுண்டு. நெடுங்காலமாகப் போற்றிவந்த தமிழ் நெறிக்கு நல்ல உருவம் கொடுத்து, உயர் தமிழை உலகறியச் செய்த பெருமை வள்ளுவருக்கே உண்டு. வள்ளுவர் புதுநெறி காணவில்லை. பழைய நெறிக்குப் புத்துயிர் அளித்தார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில், தொன்மைப் புகழ்மிக்க பாரத நாடு பல்வேறு அன்னியருக்கு அடிமைப்பட்டுப் பண்டைச் சிறப்பை இழந்து நின்றது. கலை கலாச்சாரம், பண்பாடு, சமய மரபு இவையெல்லாம் முன்னோர் ஓதிய நெறியில் நில்லாமல் சீரழிந்து கிடந்தன. இந்து மதத்துக்குள் பல்வேறு கிளைகள், எண்ணத் தொலையா உட் பூசல்கள் தோன்றியிருந்தன. கற்றோரெனக் கூறத்தக்கோர், மேலை நாட்டு நாகரிகத்தில் மூழ்கி நம் நாட்டுச் சீரிய பண்பாட்டை மறந்து நின்றனர்.

இந்தியாவிற்கு இனி ஒரு புது வாழ்வு உண்டாவென இதயமுள்ளோர் ஏங்கியபோது, நாட்டின் நலிவைப் போக்கி நல் வாழ்வு நல்கப் பரமஹம்சர்

தோன்றினர். நாட்டினைக் கவ்வி யிருந்த இருளை அகற்றி இந்து மதத்திற்கு புத்துயிர் அளித்து, என்றும் அழியாத நிலைத்த பெருமையைத் தேடித் தந்தார். அழிந்து கொண்டிருந்த இந்து மதம் இராமகிருஷ்ணரது ஆக்க பூர்வமான சிந்தனையைப்பெற்றுப் புது வாழ்வை எய்தியது; காலத் திற்கேற்ப வடிவத்தைப் பெற்றது.

இவ்விரு சான்றோரும் அரிய கருத்துக்களை எளிய முறையில் எடுத்துரைத்து வெற்றி கண் டனர். இதற்குச் சான்று காண் போம். மனிதப்பிறவி பெற்றவன் உருவத்தால் மட்டுமல்லாமல் உள்ளத்தாலும் உயர்ந்து உலகோர் போற்ற வாழும் வாழ்க் கையைப்பெற்றால், விண்ணுலகில் உள்ள தெய்வத் தோடு வைத்து எண்ணப்படுவான் என்கிறார் வள்ளுவர்.

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்
பவன் வானுறையும் தெய்வத்துள்
வைக்கப் படும்'

என்பது அவர் வாக்கு.

மனிதனை விலங்கு நிலையிலிருந்து வேறு படுத்தித் தெய்வ நிலையை அடையச் செய்யும் முயற்சிதான் உயர்ந்த நெறி. அவ் வழியை ஒருவன் இடையறாது கொண் டொழுகுவானே யாகில் அவன் மாத்தருள் ஒரு தெய்வமாக மதிக்கப்படுகின்றான். பகவான் பரம ஹம்சரும், எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் திருவருளை, அவரது உயரிய படைப்பாகிய மனிதனிடம் காணும்போதுதான் ஒருவன் பரிபூரண ஞானம் அடைந்தவனாகக் கொள்ளப்படு வான் என்கிறார். நல்லவனாகவும், நய வஞ்சகனாகவும், பாராளு பவனாகவும், பாதகனாகவும் உரு வெடுத்துள்ள மாந்தருக்குச் செய் யும் தொண்டே, ஆண்டவனுக்குச் செய்யும் விருப்பமான பணியா கும். இப்பணியைச் செம்மையுறப் போற்றி, மனிதரை அறவழியில் அழைத்துச்சென்று தெய்வநிலை எய்த வழி காட்டினார் பரம ஹம்சர்.

இவ்வுலகில் செயற்கரிய செயல் களைச் செய்வதற்காகவே மனிதன் படைக்கப்படுகின்றான். அவ்வாறு இருந்தும் தன் உண்மை நிலையை அறியாமல், வெறும் பொருள் ஈட் டத்திலும், நிலையிலாத இன்பத் திலும் நாட்டம் கொண்டு, வாழ் நாளை வறிதே செலவிடுகின்றான். பொருளை நம்பிப் புகழ் விரும் பாத மனிதப் பிறவி இப் மண்ணுக்குப் பாரமாவான் என் பர் வள்ளுவர் :

'ஈட்டம் இவறி இசைவேண்
டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை'

பகவான் இராம கிருஷ்ணரும் இக் கருத்தைத் தான் அறிந்த செய்திவாயிலாக அவனிக்கு அறி வுறுத்துகின்றார். வறுமையே வாழ் வாகக் கொண்ட குடும்பத்தில் பிறந்த ஒருவன், மிகத்துன்பப் பட்டுக் கற்றுத் தேறி உயர்நீதி மன்றத்தில் நீதிபதிப் பதவியைப்

பெறுகின்ருன். அப்பதவியைப் பெற்லதும், 'என் வாழ்வில் மிக உயர்ந்த பதவியைப் பெற்று விட்டேன், இனி எனக்கு எக் குறையுமில்லை' என இறுமாந்து பொழுதை இன்பமாகக் கழித்து வருகின்ருன். அதே மனிதன் அப் பதவியிலிருந்து ஓய்வுற்று உப காரச் சம்பளம் பெற்று வரும் நாளில், கடந்துபோன நாட்களில் ஆற்றிய சாதனைகளை எண்ணிப் பார்க்கின்ருன். அவனுக்கு ஏமாற்றம்தான் எஞ்சியதாகத் தோன்றுகிறது. வாழ்வதறியாது பயனற்ற வழியில் அதைச் செல விடும் மனிதனின் சிந்தனையைத் தூண்டி, அவன் செயல் முறை புகழ் நிறைந்ததாக அமைய வேண்டுமென வழிகாட்டுகின்ருர் பரமஹம்சர். புகழ் இல்லெனில் மனிதன் நிலத்திற்குச் சுமை என்பதே அவரது தெளிந்த கருத்து.

திருவள்ளுவர் தம் அருமைத் திருக்குறளில் எங்கணும் உள்ளத் தூய்மையையே வலியுறுத்திச் சொல்வார்.

'உள்ளத்தால் பொய்யாது
ஒழுகின்'
'உள்ளத்தால் உள்ளலும் தீதே'

'தன்னெஞ் சறிவது
பொய்யற்க'
என்பவை குறள் நெறிகள்.

அறங்களிலெல்லாம் தலை சிறந்தது, மனத்தின்கண் குற்றமில்லாத தன்மையே என்பது வள்ளுவர் கருத்து.

'மனத்துக்கண் மாசிலனுத
லனைத்தறன்
ஆகுல நீர பிற'

பரமஹம்சரும் மனத்தூய்மையையே வற்புறுத்துகின்ருர். ஒரு மனிதனுடைய பாவ புண்ணியங்கள், அவனுடைய எண்ணங்களையும் மன உணர்வுகளையும் பொறுத்தே அமைகின்றன—புறத்தே நிகழும் செய்கைகளால் அல்லவென்பதை, ஒரு கதை மூலமாக அவர் எடுத்துக் காட்டுகின்ருர்.

இரண்டு இளைய நண்பர்கள் பாகவதம் படிக்கும் வீதியை அடைந்தனர். இருவருள் ஒருவன் இப்பாகவதக் கதையைக் கேட்போமென்று கூறினுன். அதற்கு மற்றவன் உடன் படவில்லை. பாகவதத்தைக் கேட்பதால் விளையும் பயன் என்ன எனக் கேட்டு, இதைவிட இன்பம் பயப்பது பரத்தையர் உறவு எனக் கூறி அவ்வீட்டை அடைந்தான். ஒருவன் வீதியில் பாகவதம் கேட்டுக் கொண்டிருந்தான். மற்றவன் தகாத இடந்தனில் இரவைக் கழித்தான். ஆனுல் அவனுடைய மனமோ பாகவதத்திலும், அக் கதை கேட்கும் நண்பன் பெறும் இன்பத்திலும் ஆர்வமுடையதாக இருந்தது. பாகவதம் கேட்கும் இளைஞனின் நெஞ்சமோ, பரத்தை வீட்டிற்குச் சென்ற நண்பனையே தேடிச் சென்றது. செல்லக்கூடாத

வீட்டிற்குச் சென்றவனுடைய மனம் பாகவதத்தையே நினைத்தது. அதனால் அவனுக்குக் கெட்ட இடத்திலுங் கூடப் புண்ணியம் கிட்டிற்று. இடத்தைப் பொறுத்த மட்டில் பாகவதம் கேட்கும் சூழ்நிலையில் இருந்தாலும், சிந்தனையில் தீய நினைவுகளோடு இருந்ததால், ஏற்றம்பெற முடியாமல் இழிநிலையாகிய பாவத்தைச் சுமந்தான் மற்றவன். மனிதனுக்குத் தீமைகள் இடத்தால் வந்து சேருவதில்லை; அவனுடைய எண்ணங்களால்தான் வந்தடைகின்றன.

வாழ்வில் நிலையான இன்பத்தைப் பெற வேண்டுமானால், நம்பிக்கையில் குழந்தையைப் போல் இருக்க வேண்டும். இந்த நம்பிக்கை நட்பென்ற பயிருக்கு நீராக அமையும். இதனைக் கண்ணோட்டம், நாகரிகம் என்று வள்ளுவப் பெருந்தகை கூறுவர். "தன்னோடு பயின்றாரைக் கண்டால், அவர் கூறியவதனை மறுக்க மாட்டாமை" என்று பரிமேலழகர் உரை வகுப்பர். நயத்தக்க நாகரிகம் விரும்புபவர், பயின்றவர் தமக்கு நஞ்சிடக்கண்டு வைத்தும் அதனையுண்டு பின்னுமவரோடு மேவுவர்.

'பெயக்கண்டும் நஞ்சு உண்டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்'

இதே கருத்தைப் பரமஹம்சரும் ஒரு சம்பவத்தின் மூலமாக விளக்குகின்றார்.

ஒரு நாள் கண்ணபிரான் பார்த்திபனோடு தேரில் சென்று கொண்டிருந்தார். கண்ணன் அர்ச்சுனனை நோக்கி 'அதோ பார், வானத்தில் வண்ணப் புறாக்கள் வட்டமிட்டுச் செல்கின்றன' என்றார். விண்ணை அண்ணாந்து நோக்கிய அர்ச்சுனனும், ஆமெனத் தலையசைத்தான். சிறிது தூரம் தேர் சென்ற பின், "அர்ச்சுனா, அவை புறாக்கள் அல்ல" என்று கண்ணன் மொழிந்தான். அதனையும் மறுக்காது அர்ச்சுனன் "ஆம்" என்றான். இதனால் அர்ச்சுனன் கண்ணனை முகமன் செய்வதற்காக இவ்வாறு நடந்துகொண்டான் என்பதன்று. அர்ச்சுனனுக்குக் கண்ணன் மீது அவ்வளவு அளவிடமுடியாத நம்பிக்கை இருந்தது. இத்தகைய முழு நம்பிக்கைதான் வாழ்வில் உயர் நிலைக்குக் கொண்டு செல்லும் பெற்றி வாய்ந்தது.

இவ்விரு பெரும் பேரருளாளர்கள் கண்ட பேருண்மைகள், மனித சமுதாயத்திற்கு மெய்ப் பொருள் காட்டும் துணையாக அமைந்து நிற்கின்றன.



---

எல்லா விலங்குகளையும் எல்லாத் தேவ தூதர்களையும் பார்க்கிலும் மனிதன் உயர்ந்தோன்; மனிதனினும் உயர்ந்தோன் எவனும் இல்லை. தேவரும் மீண்டும் கீழே வந்து, மனித உடல் வாயிலாக முத்திபெற வேண்டியவரே. மனிதன் மட்டுமே பூரணமடைகின்றான்; தேவரும் அடையார்.

# அம்பிகை உபாஸனையின் பலன்



**ஜகத்குரு**
**ஸ்ரீ காமகோடி ஆச்சார்ய ஸ்வாமிகள்**

ஏகாந்த பக்தி அம்பிகையிடத்தில் யாருக்கு உண்டோ, அவர்களுக்கு ஸரஸ்வதியின் அருள் நிறைய உண்டாகும். நல்ல புத்தி ஏற்படும். அதற்கு எல்லை எவ்வளவு? பிரம்மாவினிடத்தில் அது ஸம்பூர்ணமாக இருக்கிறது. அம்பிகை உபாஸகனுக்கு அதைவிட அதிகமாக உண்டாகும். அதனால் பிரம்மாவுக்குக் கோபம் வரும்.

இப்படி, ஹரியும் பிரம்மாவும் கோபித்துக் கொள்ளும் வரைக்கும் ஸரஸ்வதீ லக்ஷ்மீகடாக்ஷம் அம்பிகையின் பக்தனுக்கு உண்டாகும். ஐசுவரியம் எதற்கு வேண்டும்? அநுபவிக்கவும், தர்மம் பண்ணவும், உபகாரம் பண்ணவுந்தான் வேண்டும். பாபியிடம் ஐசுவரியம் போனால், அவனுக்கும் கேடு; லோகத்துக்கும் கஷ்டம் உண்டாகும்.

புத்தி, ஐசுவரியம் இந்த இரண்டும் வந்துவிட்டன. இன்னும் என்ன வேண்டும்? அம்பிகை வேண்டும் என்பதைக் கொடுப்பாள். நமக்குக் கேட்கத் தெரியாவிட்டாலும், எது வேண்டுமோ அதைக் கொடுப்பாள்.

நிறையப் படிப்பு, வேத சாஸ்திர அறிவு, பல பாஷாஜ்ஞானம், ஐசுவரியம், இவையெல்லாம் இருந்தாலும், இன்னும் ஓர் ஆசை இருக்கிறது.

அது என்ன?

ஒவ்வொருவருக்கும் இரண்டு அபிப்பிராயங்கள் இருக்கின்றன. 'நாம் எல்லோரைக் காட்டிலும் புத்திசாலி, எல்லோரையும்விட அழகுடையோம்' என்ற எண்ணமிருக்கிறது.

புத்தி அழகு இவை உத்க்ருஷ்டம் என்பதனால், அவை இருப்ப

தாக நினைவு இருக்கிறது. அழகு புத்திசாலித்தனம் இருக்கின்றன வென்ருல், ஸந்தோஷம் உண்டா கிறது. அழகு இல்லை யென்ருல் நன்ருக இல்லை. பரிபூர்ண லாவண் யம் வேண்டும். மஹாதேஜஸ் வேண்டும். எல்லோரும் பார்த்து ஆச்சரியப்படும்படியான தேஜஸ் வேண்டும். அதுவும் அம்பிகையை உபாஸிப்பதனுல் கிடைக்கும்.

அழகில் முதல்வனுகச் சொல் லப்படுபவன் மன்மதன். ஈசுவ ராதிகளைச் சொல்லும் பொழுது கூட, கோடி மன்மதனைப்போன்ற அழகுடையவர் என்று சொல்லுவ துண்டு. அவன் தான் அழகின் பேரெல்லை. அம்பிகையை உபா ஸிப்பவர்களுக்கு, அவனை விட அதிகமான அழகு கிடைக்கும்.

ஸரஸ்வதியும் லக்ஷ்மியும் ஸ்திரீ கள். அவர்கள் அநுக்கிரஹம் வைத்தால், அவர்கள் புருஷர்கள் கோபித்துக் கொள்ளுகிருர்கள். இங்கே மன்மதனுக்கு ஸமான மான அதிக அழகு கிடைப்பதற்கு அடையாளம் என்ன? ரதி பதி விரதை. அம்பிகையின் கடாக்ஷம் உள்ள மஹாபுருஷனைப் பார்த் தால், "நம்முடைய புருஷன் இங்கே எங்கே வந்தார்?" என்ற பிரமம் அவளுக்கு உண்டாகும். அதனுல் அவளுடைய பாதி விரத்தியம் கொஞ்சம் சிதிலமாகி விடும்.

ஸரஸ்வதிகடாக்ஷம், நாம் புத்திசாலி என்ற கர்வத்தைப் போக்குகிறது. பணத்தை வைத் துக்கொண்டு க்ஷேமமாக இருக் கும் மார்க்கத்தைத் தரும் கல்வி உண்டாகிறது. பணமும் அழகும் இருக்கின்றன. இவ்வளவுக்கும் பின்பு இன்னும் என்ன வேண் டும்?

"எல்லாம் இருக்கின்றன; ஆனுல், இவன் பிள்ளைக்குக் கர் மாதிகாரம் சீக்கிரம் வருகிறது" என்ருல், இவ்வளவினுலும் என்ன பிரயோஜனம்? ஆதலால், எத் தனை நாள் இருக்க வேண்டு மென்று தோன்றுகிறதோ, அவ்வ ளவு நாள் ஒருவன் அம்பிகை கிருபையினுல் தீர்க்காயுளோடு இருக்கலாம்.

வித்தை, அர்த்தம், லாவண் யம், தீர்க்காயுள், எல்லாம் வந்து விட்டன. அப்புறம் என்ன வேண்டும்?

"இப்படியே இருந்துகொண்டு என்ன பண்ணுவது? இது என்ன வேலை? எதற்காக இப்படி இருக்க வேண்டும்" என்று தோன்றுவது தான், அடுத்தபடியாக வேண்டி யது. அப்படி நாமாக க்ஷணம் நினைத்தால், நடுவிலே போய் விடும். அம்பிகை கிருபையினுல் தானுகத் தோன்றவேண்டும்.

இவ்வளவையும் வைத்துக் கொண்டு ஏன் உட்கார்ந்திருக்க வேண்டும்? பிரயோஜனம் என்ன? அது வேணும் இது வேணும் என்ற பாசம் எதற்கு?

அநாவசியமான பிரேமை நம்மை இழுக்கிறது. பாசம் கட்டி

இழுக்கிறவரைக்கும் நாம் பசு. நாம் பகவானாகிற வரையில் அந்தப் பாசம் இருக்கும். அதுவரையில் நாம் பசு; அவன் பசுபதி; பின்பு பரப்பிரம்மம். பசுவுக்கு உள்ள பாசத்தைக் கத்தரித்துவிட்டால் பசுத்துவம் போய்விடும்.

என்றைக்கு வைராக்கியம் தோன்றுகிறதோ, அன்றைக்குப் பாசம் அறுந்துவிடும். பணம், அழகு, ஆயுள், மனது இவைகளைக் கொண்டு நாம் கட்டப்பட்டிருக்கிறோம். அவை வேண்டாம். உள்ளே சுத்தமான ஒன்றுதான் இருக்கிறது. அது ஆத்ம ஸ்வரூபம். பசுபாசத் தொடர்பு அற்றுப்போனால் பேரின்பமயமாக இருக்கலாம். அதுதான் பலன்; கடைசி முடிவு.

இன்றைக்கே பேரானந்தம் உண்டென்றால். ஒருவனும் பஜனம் பண்ணமாட்டான். அதனால் அம்பிகையை உபாஸிக்கிறவன், முதலில் கல்வி பணம் முதலியவைகளைப் பெற்று, பின்பு பரமானந்தத்தை அடைகிறான்.

ஆகையினால், ஜகத்துக்குத் தாயாகவும் கருணை யுடையவளாகவும் இருக்கும் பரதேவதையிடம், கன்றுக்குட்டியைப் போன்ற பக்தி நமக்கு இருக்கவேண்டும். எப்படிக் குழந்தைக்கு வேண்டியதைத் தாய் தருவாளோ, அப்படி அவள் இஹலோகத்தில் வித்தை, பணம் முதலியவைகளை அடையச் செய்து, பின்பு தானாகப் பழுத்துப் பரமானந்தத்தைப் பெறும்படி அநுக்கிரஹம் செய்வாள்.

———

CASH OR HIRE PURCHASE

**Blue Mountain Electricals**

AUTHORISED DEALER FOR:

MURPHY, BUSH, NATIONAL EKCO, TELERAD, TELEFUNKEN RADIOS AND TRANSISTORS, RALLI, VIJAY, USHA, ORIENT, BAJAJ TABLE AND CEILING FANS, KHIRA, CHANDAN STEEL CABINETS, CROMELITE CHALLANGE FOLDING FURNITURES, MERRITT, USHA, SEWING MACHINES, "U" FOAM, PRESTIGE PRESSURE COOKER, KLEARTONE-BAJAJ APPLIANCES & ETc.

H. O.
No. 26, Usman Road,
T. NAGAR, MADRAS-17
Phone: 443027

B. O.
No. 146, R. K. Mutt Road,
MYLAPORE, MADRAS-4

# உள்ளம் கவர் கள்வன்



ஸ்ரீ திருமுருக
கிருபானந்தவாரியார்

நம்மிடம் உள்ள பொருளை நாம் அறியாதபடி கொள்ளை கொள்பவனைக் 'கள்வன்' என்றும் 'சோரன்' என்றும் கூறுகின்றோம், உலகிலே கள்வர்கள் பலர் இருக்கின்றார்கள்.

மேலும், கள்வன் நம் கண்களுக்குத் தெரியாத வண்ணம் ஒளிந்திருப்பான். ஒளிந்திருந்தால் தானே களவு செய்ய முடியும்?

சிவபெருமான் ஒரு பெரிய கள்வன்; அப்பெருமான் ஒளிமயமானவன்; ஆனால் மறைந்திருக்கிறான். "மறைய நின்றுளன், மாமணிச் சோதியான்" என்கின்றார் அப்பரடிகள்.

இக்கள்வன் காசு பணந் திருட மாட்டான். உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்ற கள்வன். "உள்ளங்கவர் கள்வன்" என்பது திருஞானசம்பந்தர் திருவாக்கு.

இத் திருடன் எங்கும் நிறைந்திருக்கின்றான். ஆனால் காண முடியவில்லை. ஒவ்வொரு உயிரிலும் ஒளிந்திருக்கின்றான்.

மதுரையை அழிக்கின்ற வேகத்தில் வைகை யாற்றில் பெருவெள்ளம் வந்தது. எல்லோருக்கும் அதன் கரையை உயர்த்த அரசன் கட்டளையிட்டான். 'வந்தி' என்ற நரை மூதாட்டிக்குக் கூலியாளாகச் சொக்கலிங்கப் பெருமான் வந்தார். வந்தவர் ஒழுங்காக வேலை செய்யவில்லை. மற்றவர்களும் வேலை செய்யாத வண்ணம், ஆடல் பாடல் புரிந்து அவர்கள் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டார். அரிமர்த்தன பாண்டியன் பார்வையிட வந்தான்.

"ஏன் இந்தப் பங்கு அடைபட வில்லை? இது யாருடைய பங்கு?" என்று சீற்றத்துடன் கேட்டான்.

"இது வந்தியின் பங்கு; வந்தி ஒரு ஆளை அனுப்பினுள்; அவன் ஆடுவதும் பாடுவதுமாக இருக் கின்ருன். வேலை செய்யவில்லை" என்ருர்கள். அரசனுடைய ஏவ லர்கள்.

"எங்கே அவன்?" என்ருன் பாண்டியன்.

மன்னனுடைய சீற்றத்தைக் கண்ட பரிசனங்கள் அஞ்சி, கூலி யாளாக வந்த ஆண்டவனை இழுத் துக் கொண்டுவந்து காட்டினுர் கள். இந்தச் செய்தியைக் கூறு கின்ருர் பரஞ்சோதி முனிவர்.

"வள்ளல் தன் சீற்றங் கண்டு
மாறுகோல் கையரஞ்சி
தள்ளருஞ் சினத்த ராகித்
தடக்கைதொட்டிழுத்து வந்து
உள்ளோடுபுறங்கீழ் மேலாய்
உயிர்தொறும் ஒளித்து நின்ற
கள்வனை இவன்தான் வந்திக்
காளெனக் காட்டி நின்ருர்"

ஒளிந்திருக்கின்ற அவ்வொரு வனை நாம் எப்படியாவது கண்டு பிடிக்க வேண்டும். கண்டுபிடிக்க முயலுதல் வேண்டும்.

மாணிக்கவாசகர் அம்முயற்சி யில் ஈடுபடுகின்ருர்; நம்மையும் அதில் ஈடுபடவைக்கின்ருர்.

இறைவன் எப்படி ஒளிந்திருக் கின்ருன் என்று மாணிக்கவாசகர் திருவண்டப்பகுதியில் திருவாய் மலர்ந்தருளுகின்ருர்:

"திசைமுகன் சென்று
தேடினர்க் கொளித்தும்
முறையுளி யொற்றி
முயன்றவர்க் கொளித்தும்
ஒற்றுமை கொண்டு
நோக்கும் உள்ளத்(து)
உற்றவர் வருந்த
உறைப்பவர்க் கொளித்தும்
மறைத்திறம் நோக்கி
வருந்தினர்க் கொளித்தும்
இத் தந்திரத்திற் காண்டும்
என்றிருந்தோர்க்(கு)
அத் தந்திரத்தின்
அவ்வயின் ஒளித்தும்"

பிரமதேவன் தேடியும், அவன் ஒளிந்திருக்கிருன். ஐம்புலன்களை ஒடுக்கி மலைகள் தோறும் போய், எல்லாவற்றையும் துறந்து, உடம்பு உலர்ந்து, தவம் புரி வோர்க்கும் ஒளிந்திருக்கின்ருன்.

"ஐம்புலன் செலவிடுத்
தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த
வெற்றுயி ராக்கை
அருந்தவர் காட்சியுள்
திருந்த ஒளித்தும்
ஒன்றுண்டில்லை யென்றறி
வொளித்தும்"

ஒரு பொருள் உண்டு இல்லை என்று ஐயுறுவார்க்கும் ஒளிந் திருக்கின்ருன்.

"ஆ! ஆ! இவ்வண்ணம் ஒளிக் கின்ற சோரன் இதோ! இவனை விடக்கூடாது! இச் சோரனைக் கட்டுங்கள். இத் திருடனுடைய

கால்களைப் புதிய மலர் மாலையால் கட்டுங்கள்."

"பண்டே பயில்தோறும்
இன்றே பயில்தோறும்
ஒளிக்கும் சோரனைக்
கண்டனம்
ஆர்மின் ஆர்மின்
நாண்மலர்ப் பிணையலின்
தாள்தளை யிடுமின்."

"விட்டுவிட்டால் பின்னர் இச் சோரன் அகப்படமாட்டான். சுற்றி வளைத்துக் கொள்ளுங்கள்; சூழ்ந்து கொள்ளுங்கள்! போய் விடுவான்; போகவிடாமல் தொடருங்கள்; விடாதீர்கள்; பற்றுங்கள்!"

என்று கூறி, மிக மிக எச்சரிக்கையாக முயன்றவர்க்கும், உடனே தோன்றுகின்றாற்போல் தோன்றி, அவன் ஒளித்துக் கொண்டான்.

"சுற்றுமின் சூழ்மின்
தொடர்மின் விடேன்மின்
பற்றுமின் என்றவர்
பற்றுமுற் றொளித்தும்"

இவ்வண்ணம் ஒளிக்கின்ற சோரனாகிய சிவபெருமான், அளவற்ற அன்பால் உருகி உருகி ஏங்கிய மாணிக்கவாசகரை, அறைகூவி அழைத்து வலிதில் ஆட்கொண்டருளினான்.

'அறைகூவி ஆட்கொண்
டருளிய
.........................
தடக்கையின் நெல்லிக்
கனியெனக் காயினன்'

இவ்வாறு இறைவன் மணிவாசகருக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போல் தோன்றி, அவர் உடம்பெல்லாம் தேங்கவும், மயிர்க்கால் தோறும் அந்த ஆனந்தத்தேன் வெளிப்படுமாறும் செய்தான்.

"வாக்கிறந் தமுத
மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன்"
"அற்புத மான அமுத
தாரைகள்
எற்புத் துளை தொறும்
ஏற்றினன்"

இறைவன் தன்னை நினையாதார்க்கு ஒளித்திருப்பான்; ஆனால் ஒளிமயமானவன்.

"ஓராதார் உள்ளத்து
ஒளிக்கும் ஒளியானே"

பலகோடி கற்பங்கள் வரை நெருப்பின் நடுவில் ஊசியின் மீது காலை ஊன்றி அழகு நீங்கவும், உணவு இன்றி உறக்கம் இன்றியும், உடல் மெலிந்து எலும்பு தோன்றவும், மெய், வாய், கண், நாசி, செவி என்ற ஐம்பொறிகளை அவித்து நின்றவர்க்கும், இறைவன் ஒளித்திருக்கின்றான். வேதங்களுக்கு ஒளிந்தும், யோக நெறியில் நெடுங்காலம் நின்ற முனிவர்கட்கும் ஒளித்திருக்கின்றான். தேவர்கட்கும் ஒளித்திருக்கின்றான். உயர்ந்த ஞானத்தில் ஞானமாய் நின்ற அவன், சிவஞானம் பெற்ற திருவாளர் உள்ளத்தில் கலந்து நின்று காட்சி தருகின்றான்.

"கற்பங்கள் பலகோடி
செல்லத் தீய
கனலினடு வூசியின்மேற்
காலை யூன்றிப்
பொற்பறமெய் யுணர்வின்றி
யுறக்க மின்றிப்
புலர்ந்தெலும்பு புலப்பட
வைம் பொறியை யோம்பி
நிற்பவருக் கொளித்துமறைக்
கொளித்து போக
நீண்முனிவர்க் கொளித்த
மரர்க் கொளித்து மேலாஞ்
சிற்பதத்தீஞ் சின்மயமாய்
நிறைந்து ஞானத்
திருவாள ருட்கலந்த
தேவ தேவே."

# எது உண்மை நெறி?

## மஹரிஷி அரவிந்தர்

நம் கருத்துக்களுக்கு மாருன கருத்துக்களேயும் ஏற்பதுதான் உண்மையான நெறியாகும்... இதுதான் உண்மை என்று பிடிவாதமாய் ஒன்றைச் சாதிப்பதைப்போல ஒரு பயங்கரமான பொய்யை, நாம் பார்க்க இயலாது.

உண்மைக்குப் பகையாய் நிற்பது வெறும் வரட்டுத் தருக்கமே. தான் பற்றும் நெறியே உயர்ந்த நெறி என்று மார்பு தட்டி உரைப்போரும் அறத்திற்குப் பகைவர்களே. தருக்கம் தன் பிழையை அறியாது; பின்னர்க் கூறப்பட்ட இனத்தோர்களோ, தம் குறைபாடுகளேத் தெரிந்து கொள்ளமாட்டார்கள்.

அஞ்ஞான அந்தகாரத்தில் நான் துயின்று கொண்டிருக்கிற பொழுது, தியானத்தில் ஆழ்ந்த மாசிலாச் சான்ருேர்கள் நிரம்பிய இடத்திற்கு வந்தேன். அவர்களுடைய சங்கம் எனக்கு அருவருப்பை அளித்தது. அவர்களின் உறைவிடமும் ஒரு சிறைச்சாலேயாகக் காட்சி அளித்தது.

ஆனுல் விழித்தெழுந்த நான் ஞான ஒளி பெற்றபொழுது, கடவுள் என்னே ஒரு சிறைக்கூடத்திற்கு அழைத்துச் சென்ருர். அந்த இடம் எனக்கு ஒரு தபோவனமாகவும், ஆண்டவன் என்னேடு தனித்துக் குலாவும் ஓர் ஏகாந்த புண்ணியத் தலமாகவும் காட்சி கொடுத்தது.

சுவையற்ற ஒரு புத்தகத்தை இன்பமாகப் படித்து, அதனுல் எழுகின்ற அயர்விலும் ஒரு பூரணத்துவத்தைக் காண்கின்ற நிலேயில்தான், என்மனம் எனக்கு வயப்பட்டது என்றதை உணர்ந்தேன்.

கோரமயமான ஒன்றைக் கண்டு, அதை வெறுத்துப் பிறர் அகல்வதை நான் நன்ருய் அறியாமலில்லே. ஆனுல் அந்தக் கோர வடிவிலும் நான் அழகின் தாண்டவத்தை நோக்கும் நேரத்தில் தான், என் மனத்தின்மீது நான் ஆணே செலுத்த முடிந்தது என்றதை அறிந்தேன்.

கோரத்தில் வனப்பையும், தீதில் நல்லதையும் பார்க்க வேண்டும். ஆனுல் தீதையும் கோரத்தையும் அறவே அகற்ற முயல வேண்டும். இதுதான் உண்மையான அறமும், ஒழுக்கமும் ஆகும்.

ஒரு பாவி என்று ஒருவனை வெறுப்பதைப் போல வேறு பாவமில்லை. இப்படி வெறுப்பதால் ஆண்டவனையே அவன் வெறுப்பதாகும். ஆனால் பாவியைப் பகைக்கிறவனோ, தான் ஓர் உயர்ந்த அறிநெறியிலிருக்கிறதாகத் தற்பெருமை எய்துகின்றான்.

* * *

கடவுள்பால் அன்பு செலுத்த முடியும். ஆனால் மன்பதை மீது அன்பைச் சொரிய மனிதன் தவறி விடுகின்றான். இது ஓர் அற்புதமே. இந்நிலையில் இவன் யார்பால் அன்பு காட்டுகின்றான் என்பதை யான் அறிந்திலேன்.

"எந்தக் காலங்களில் அமுதத்தைப் பெய்யலாம்?" என்னும் சொற்போர் நிகழ்கின்றது. இத்தகைய சண்டையை ஒக்கின்றன சமயச்சழக்குகள். அவர்கள் வாதங்கள் புரியட்டும். நாம் விழைவது, அமுதைப்பருகி அழியாத்தன்மை எய்துவதே. அந்த அமுதம் எந்தக் கலத்தில் இருந்தால் என்ன?

பானையின் மணம் அந்த அமுதத்தில் கமழக்கூடும். அதைத்தான் சுவையென்றழைப்பர். ஆனால் அக்காரணம் பற்றி, அமர நிலையை நல்கும் அதன் ஆற்றலை அகற்ற யார்தான் வல்லவர்?

* • *

வெறும் சொற்போரில் ஆர்வ மிக்கோனே! அதில் திளைக்குந்தோறும், நீ இரங்கத் தக்கவனன்றோ? உந்தன் வால் அறிவின் எல்லை விரிவதற்கு உற்ற வாய்ப்பை, அந்தோ! நீ இழந்து விட்டாயே!

ஓர் அறிவிலி முழுதும் பிதற்றக் கண்டேன். இதைப் பற்றிக் கடவுள் என்ன கருதுகிறாரோ என்னும் வியப்பில் ஆழ்ந்தேன். சற்று ஆய்ந்து பார்க்குமிடத்து, உயர் உண்மையையும் பழுத்த ஞானத்தையும் திரித்துக்காட்டும் திரையென அவன் அறிவீனத்தை ஓர்ந்தேன்.

தேவைப்படுமிடத்து பலவீனத்தையும் ஏற்றுக்கொள்ளும் வகையிலே, அத்துணை ஆற்றல் படைத்தவனாக இறைவன் திகழ்கின்றான் என்று ஒரு நபியடியார் உரைக்கின்றார்.

தன்னுடைய அருஞ்செயல்களில் ஆண்டவன் அடிக்கடி வெற்றி காணாதவனாய் ஆகின்றான். இதுவே எல்லையற்ற கடவுளின் இறைமையைச் சுட்டும் ஓர் அறிகுறியாய் நிற்கின்றது.

* * *

பாவம் என்பது மனிதனிடத்தில் இல்லை. அவனிடத்தில் காண்பவை மிகுதியான வெந்நோயாம் அறிவின்மையும், நெறியிலாச் செயலாற்றும் தன்மையுமே யாகும்.

மனிதன் தன்னுடைய குறைபாடுகளைக் கண்டு அருவருப்புக் கொள்ள, பாவத்தைப் பற்றிய

உணர்வு இன்றியமையாததே. அவனுடைய ஆணவத்தைத் துடைக்க, ஆண்டவன் ஆளும் மாமருந்தும் அதுவே. தன் குற்றம் காணுது பிறர் குற்றங்களை மிக நுணுக்கமாய் நோக்கும் மனிதனுடைய பேராணவம்தான், இறைவன் மேற்கொள்ளும் கருவிக்கு எதிராக நிற்கின்றது.

தன்னுடைய முழு நிறைவிற்கு ஈர்த்துச் செல்லும் இறைவனின் முயற்சிகளை எதிர்க்கவே, பாவ புண்ணியமாம் விளையாட்டில் நாம் திளைக்கின்ருேம். அறத்தின் உணர்வே, மறைவில் பாவங்களைப் பேணி வளர்க்கத் துணை புரிகின்றது.

இரக்கமின்றியே உந்தன் இதயத்தைத் துருவி ஆய்வாய்; அக்கணமேதான் பிறர்பால் மிகுதியான பரிவும் கண்ணேட்டமும் உள்ளவனுய்த் திகழ்வாய்.

கருத்தென்பது, உண்மையின் பால் விடுத்த வாளியேயாகும். அது ஏதோ ஒரு முனையைத்தான் தொடுமே தவிர, இலக்கு முழுவதையும் தாக்கிவிடாது. இத்தகைய வெற்றி நறவுண்ட வில்வலவன் வேருென்றையும் விழையான்.

அறிவாம் வைகறையின் அறிகுறி யாதெனில், நாம் ஒன்றையும் அறிந்திலம் என்னும் உணர்வேயாகும். இதை ஒருமிடத்து, எல்லாச் செல்வங்களையும் எய்தியவர்களாகத் திகழ்வோம்.

ஞானத் தெய்வ நங்கை நம் முன் எழுந்தருளும் பொழுது, அவள்தன் படிப்பினை இதுவேயாகும்: "தனிப்பட்ட அறிவென்பது ஒன்றில்லை. எல்லாம் வரம்பிகந்த இறைவனைச் சுட்டும் குறிப்புக்களேயாகும்."

* * *

பெரு ஞானிகள் அற்புதங்களை ஆற்றியிருக்கின்ருர்கள். இவர்களைக் காட்டிலும் மேம்பட்டவர்கள், அற்புதங்களைத் தங்கள் வசைவாளிகளுக்கு இலக்காக்கிவிட்டார்கள். உயர்வற உயர்ந்த சான்ருேர்கள் அவற்றின்மீது வசைமாரி பொழிந்ததுமன்றி, அவ்வற்புதங்களையும் புரிந்திருக்கின்ருர்கள்.

வெறும் இன்பம்தரும் கற்பனைகளையகற்றி, கண்களைத் திறந்து, உலகத்தையும், உலகம் படைத்தோனையும் உள்ளபடி நீ காண்பாயாக.

தான் உயிர்பெற்று வாழ்தல் பொருட்டு மரண தேவனுல் இவ்வையகம் அமைக்கப்பட்டது. மரணத்தையகற்ற முயன்ருல் வாழ்வும் நலிவுற்று அழிந்து போம். மரணத்தை நீக்க இயலுமோ? ஆனுல் அதை பெருநல வாழ்வுக்குற்ற கருவியாகச் சமைத்துக் கொள்ளலாம்.

அன்பு சொரிதல் பொருட்டு, இந்த ஞாலம் கொடுமையால் எழுப்பப்பட்டது. கொடுமையை

நீக்கக்கூடுமோ? அந்நிலையில் அன்பும் கருகி உதிர்ந்து போய்விடும். கொடுமையைக்களைய முடியாது போகினும் கொடுமைக்கு மாமுன ஆர்வமிக்க அன்பு, இன்பம், இவற்றின் நிலைக்கு அதை முற்றிலும் மாறும்படி செய்யமுடியும்.

உண்மை நிலை அறிதற் பொருட்டு, இவ்வுலகத்தை அஞ்ஞானமும் பிழையும் படைத்தன. அஞ்ஞானத்தையும் பிழையையும் துடைத்தல் இயலுமோ? அந்நிலையில் ஞான ஒளியும் அழிந்து போய்விடும். இவற்றை மாய்க்க முடியாதுபோகினும், மாபெரும் அறிவுச்சுடராக அமைத்துக் கொள்ளக்கூடும்.

மரணமின்றி வாழ்வுமட்டும் திகழுமாயின், அழிவின்மைக்கு இடமேது? கொடுமையின்றி அன்புமட்டும் மிளிருமாயின், அவ்வன்பு சுவையற்ற மின்னனைய இன்பமாய்ப்போய்விடும். அஞ்ஞானமின்றி அறிவுமட்டும் அரசு செலுத்துமாயின், நாம் அடைந்த பெரும்பேறு எல்லைக்குட்பட்ட அறிவு, இந்த உலக ஞானம், இவ்வரம்புகளை அது கடந்து நிற்காது.

மரணத்தை மாற்றினுல், அது அமரவாழ்வாக அமைந்துவிடும். கொடுமை அன்பாகக் கரையுமாயின், தாங்கரும் இன்ப நறவாய் அது இலங்கிவிடும். அஞ்ஞான இருள் பேரொளியில் மாயுமாயின், அது உலக ஞானம், அறிவு இவற்றின் எல்லைகளைக் கடந்து செல்லும்.

எதையும் தாங்கி நிற்கும் பொறையையும், இன்பத்தில் ஓங்கி நிற்கும் நிலையையும், நமக்கு அறிவுறுத்தும் பொருட்டு, உலக அன்னை துன்பக்கரங் கொண்டு நம்மை அணைக்கின்ருள். அந்த அன்னையின் படிப்பினை மூன்றுபடிகள் கொண்டது. முதற்படி பொறை, இரண்டாம்படி ஆன்மாவின் சம இயல்பு, இறுதியாகத் திகழ்வது பேரின்பமே.

இனிவரும் மிகுதியான அன்பை எய்துதல் பொருட்டே, எல்லாத் துறவறங்களும் அமைகின்றன. தத்தம் கடமையில் இன்பம் காணுதல் பொருட்டுச்சிலர் துறவறம்பூண்கின்றனர். வேறு சிலர் அமைதியின்பத்தை யடைய அவ்வாறு செய்கின்றனர். இறைவனை நண்ணி இன்புறுதல் பொருட்டு, வேறு சிலர் இந்நெறியைப் பின்பற்றுகின்றனர். உடலை வருத்தி இன்பம் துய்த்தல் பொருட்டு, மற்றும் சிலர் இந்தத் தத்துவ நெறியை மேற்கொள்ளுகின்றனர். அப்பால் திகழுகின்ற விடுதலைக்கும், குலையாத பேரின்பத்திற்கும் ஒருபாதையாக இத்துறவறம் அமையட்டும்.

ஆசையை முற்றிலும் துறந்தோ, அல்லது முற்றிலும் நுகர்ந்தோ, ஆண்டவன் அன்பணைப்பில் திளைத்தல்கூடும். ஆசை அழிவுறுவதற்குற்ற சிறப்பான சூழ்நிலையை, இவ்விரு நெறிகளிலும் ஒருவன் காண்கின்முன்,

○

# ஸ்ரீ சாந்தானந்தர்

## அருள் வாக்கு



ஸதாகாலமும் துன்பங்களைக் கொடுக்கும் தீய காரியத்தை மறைவாகச் செய்வதனுல், நீ தப்பிவிடலாமென்று நினைத்தாயா? "என்ன செய்தோம்! என்ன செய்தோம்!" என்று உன் மனம் உன்னை நிமிடம் தோறும் நினைக்கச் செய்து சித்ரவதை செய்யு மென்பதை, நீ மறந்து விடாதே.

பெரியோர் போல நடித்துப் பிறரை ஏமாற்றி வாழ்ந்து வருபவன், கொடியவர்களிலும் மிகக் கொடிய பாவியாவான்.

வடிவைக்கொண்டு நல்லவர் கெட்டவர் என்று முடிவு கட்டி விடாதே! செயலைக் கொண்டு முடிவு செய்வாயாக!

உலகம் பழிக்கின்ற செயலை உடனடியாக விட்டு விடுவதே, நீ செய்யும் தவமாக இருக்கட்டுமே!

திருட்டு நினைவு தெய்வத்தை மறக்கச் செய்யும்.

திருடனைத் தெய்வமும் வெறுத்து ஒதுக்கும்.

கள்ளமில்லாத உள்ள முள்ளவனை வரவேற்க, தேவர் உலகம் காத்திருக்கிறது.

உண்மையைப் பிறர் எப்படி அறிய முடியுமென்று நினைத்துப் பொய்த்துக் கூருதே; உண்மையை மறைத்துக் கூறுவாயேயாகில் உன் நெஞ்சே உன்னை வருத்தி வதைக்கு மென்பதை நீ மறவாதே.

பொய் பேசுபவன் செய்யும் தர்மம் நன்மை தராது.

உன்னை எல்லோரும் சிறந்தவன் என்று கொண்டாட வேண்டுமானுல், உன் மனச்சான்றுக்கு ஏற்ப நீ பொய் இன்றி வாழ்வாயாகுக!

# சுகம் எங்கே?



ஸ்ரீ வி. ஜி.
பன்னீர்தாஸ்

உலகில் உள்ள ஆண் பெண்கள் அனைவருமே சுகம் ஒன்றைத்தான் விரும்புகிறார்கள்.

அந்த சுகம் எங்கே இருக்கிறது?

பணத்தில்தான் சுகம் இருக்கிறது என்று பெரும்பாலோர் நினைக்கிறார்கள்.

பதவியில்தான் சுகம் இருக்கிறது என்று ஒரு சிலர் நினைக்கிறார்கள்.

புகழில்தான் சுகம் இருக்கிறது என்று இன்னும் சிலர் நினைக்கிறார்கள்.

ஆனால், உண்மையான சுகம் இவற்றுள் எதிலுமே கிடையாது.
உண்மையான சுகம், நமக்கு வெளியே உள்ள எப்பொருளிலும் இல்லை. நமக்கு உள்ளேதான் அது இருக்கிறது.

எனினும், நமக்கு உள்ளே இருக்கும் அந்த சுகத்தை, நம்மால் அறியமுடிவதில்லை.

நம்முடைய மனம் எந்நேரம் பார்த்தாலும் வெளியே ஓடிக்கொண்டிருப்பதே அதற்கு காரணம்.

மனம் அவ்வாறு வெளியே ஓடாமல், நமக்கு உள்ளேயே (அதாவது, தன்னில் தானே) சிறிது அடங்கியிருக்குமானால், அந்த நிமிஷமே நமது உண்மையான சுகம் நமக்குப் புலப்பட்டு விளங்கும்.

மனம் அமைதியுற்று இருக்கும் போது விளங்குகிற அந்த சுகத்துக்குத்தான், ஆத்ம சுகம் என்று பெயர்.

இந்த ஆத்ம சுகத்தை நாம் அடிக்கடி அனுபவித்துப் பழக வேண்டும். அப்படிப் பழகிவிட்டால், நாளடைவில் அது நம்மிடம் ஒரு நிலையான அனுபவமாக உறுதிப்பட்டுவிடும்.

மனம் எப்போதும் அமைதியோடு இருப்பதே, ஆத்மசுகம் உறுதிப்பட்டுவிட்டதன் அடையாளம் ஆகும்.

அத்தகைய நிரந்தரமான மன அமைதி நமக்குக் கிடைத்துவிட்டால், அதைக் காட்டிலும் நாம் பெறத்தக்க பெருஞ்செல்வம் உலகில் வேறு எதுவுமே கிடையாது.

பழைய கஞ்சியிலும் சுவை உண்டு; பாதாம் அல்வாவிலும் சுவை உண்டு. ஆனுல், பழைய கஞ்சியின் சுவையை, மன அமைதி படைத்தவனுல்தான் காணமுடியும். மன அமைதியில்லாதவனுல், பாதாம் அல்வாவில் கூடச் சுவை காணமுடியாது.

மன அமைதி படைத்தவன் ஒரு கட்டாந்தரையில் காணுகிற சயன சுகத்தை, மன அமைதியில்லாதவனுல் ஒரு விலையுயர்ந்த வெல்வெட்டு மெத்தையில் கூடக் காணமுடியாது.

மன அமைதி படைத்த ஒரு விறகுவெட்டி தன் தொழிலிலே காணும் இன்பத்தை, மனஅமைதியில்லாத ஒரு மந்திரியால் தன் (மந்திரிப்) பதவியிலே காணமுடியாது.

மன அமைதிபடைத்த ஒரு துணை நடிகன் தன் கலையிலே காணும் இன்பத்தை, மன அமைதியில்லாத ஒரு நட்சத்திர நடிகனுல் தன் ஒப்புயர்வற்ற கலைப்புகழிலே கூடக் காணமுடியாது.

எனவே, பணத்தினுல் மட்டும், பதவியினுல் மட்டும், புகழினுல் மட்டும், நாம் சுகம் அடைந்துவிட முடியாது. மனத்தில் அமைதியிருந்தால்தான், நாம் சுகம் அடைய முடியும்.

நம்முடைய முகம் ஒரு கண்ணுடியில் பிரதிபலிப்பதுபோல, மன அமைதியினுல் ஏற்படுகிற ஆத்ம சுகம் ஒன்றே நம்முடைய பணத்திலும் பதவியிலும் புகழிலிலும் பிரதிபலித்து விளங்குகிறது!

அமைதியின் வாயிலாக அந்த ஆத்ம சுகத்தைப் பெறுவதற்கு, ஆண்டவன் நமக்கு அருள்புரிவாராக!

ஆசிரியரும் வெளியிடுபவரும் : T. ராமனுதன், 4, தணிகாசலம் செட்டிரோடு சென்னை-17. அச்சிடுபவர்: கொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17